Puthu Kavithaigal



Date of Publication : 10-4-1989

Wrapper designed by : Jona

Printed by :
Rasakili Printers,
12, I Main Road,
Nehru Nagar, Adyar, Madras-600 020.

Published by :
Gnaanacheri,
37, Luz Church Road,
Mylapore, Madras-600 004.

Pri

# ஞானக்கூத்தன் முன்னுரை

'மயன்' என்ற பெயரில் திரு. க.நா. சுப்ரமண்யம் எழுதிய கவிதைகளுக்கு முன்னுரையாக அவரது கட்டுரை ஒன்றே பொருத்தமானதாக இருக்கும். அவர் வகுத்துக் கொண்ட கோட்பாடுகளுக்கு ஏற்ற மாதிரியே அவரது கவிதை கள் அமைந்துள்ளன என்று சொல்லலாம். ஆனால் ஒரு கவிஞர் தனது கவிதைகளுக்குத் தானே முன்னுரை எழுதும் போது அவற்றை அடக்கத்தின் காரணமாகக் குறைத்து மதிப்பிடலாம் அல்லது அடக்கமின்மை காரணமாக மிகை யாகக் கூறிக் கொள்ளலாம். சொல்லப்போனால் திரு க.நா.சு. கவிதை பற்றிய கோட்பாடுகளைப் பற்றிக் கூறி இருக்கும் அளவுக்குத் தனது கவிதைகளைப் பற்றிய மதிப்பீட்டில் அதிகக் கவனம் செலுத்தியிருக்கவில்லை. கவிதைகளைக் குறித்து தான் கொண்டிருக்கும் கருத்துக்குத் தனது கவிதை கள் பின்னிட்டுள்ளதாக அவர் குறிப்பிட்டிருக்கிறார். தான் எழுதிய கவிதைகளில் 'வைகுண்டம்', 'ஆ என்று முடியும் கவிதை' என்ற இரண்டு கவிதைகளே தனது கருத்துக்கு மிகவும் நெருங்கியுள்ளனவாக அவர் கருதியிருக்கிறார். அவர் கருதிய கவிதை அம்சம் மிகக் கூடுதலாக அமையத் தொடங் கியது 1980ஆம் ஆண்டுக்குப் பின்பு எழுதிய கவிதைகளில் தான் என்றும் அவர் குறிப்பிட்டிருக்கிறார்.

1938ஆம் ஆண்டு தொடங்கி 88ஆம் ஆண்டில் இறக்கும் வரைக்கும் அவர் எழுதிய கவிதைகள் ஏராளமானவை. நூறு பக்கங்கள் அடங்கிய சிறிய நோட்டுப் புத்தகங்களில் அடித்தல் திருத்தல் இல்லாமல் நிறைய கவிதைகள் அவர் எழுதியிருந் தார். இம்மாதிரியான நோட்டுப் புத்தகங்கள் அவரிடம் பல இருந்தன. வெளியீட்டுக்கு இவற்றிலிருந்துதான் அவர் படி

எடுத்துத் தருவார். ஒரே ஒரு முறைதான் நோட்டுப் புத்தகத்தையே எனக்குப் படிக்கக் கொடுத்தார். நோட்டுப் புத்தகத்தைப் பார்த்ததும் அவற்றில் எழுதப்பட்டிருந்த கவிதைகள் இறுதி வடிவம் கொடுக்கப்பட்டுப் பின்னரே இடம் பெற்றவை என்ற எண்ணம் ஏற்பட்டது. கட்டுரைகளை ஒரு முறைக்கு மேல் எழுத வேண்டிய அவசியமில்லாமல் முதல் படியே இறுதிப் படியாக அமைத்துவிடும் க.நா.சு., கவிதைகளிலும் ஒரு முறைக்கு மேல் எழுதாதவர் என்று என்னால் நம்ப முடியவில்லை. நிறைய கவிதைகளை எழுதியிருந்தாலும் அவற்றில் சிலவற்றையே தானாகத் தேர்ந்தெடுத்து வெளியீட்டுக்குத் தருவார். தனது கவிதைகளைக் குறித்து மற்றவர்கள் என்ன சொல்கிறார்கள் என்று அவர் ஒருபோதும் அறிய முற்பட்டதில்லை. அவர் கவிதைகள் பலவற்றில் சிலவற்றை எடுத்துக் கொண்டு மற்றவற்றைத் திருப்பிக் கொடுக்கும்போது தேர்வின் நியாயத்தைக் குறித்து அவர் வினவியதில்லை. ஒரே ஒருமுறை மட்டும் 'மற்றவர் உங்கள் கவிதைகளில் தேர்வு செய்வதற்கும் நீங்களாகவே செய்வதற்கும் என்ன வித்தியாசம்?' என்று என்னிடம் கேட்டார். நான் 'மற்றவர்கள் எழுதி முடித்ததில் செய்கிறார்கள். நான் எழுதுவதற்கு முன்பாகவே செய்து விடுகிறேன்' என்று சொன்னேன்.

க.நா.சு.வுக்கு ஆங்கில யாப்பு தெரியும். தமிழில் யாப்பு தெரிந்து கொள்ள அவர் செய்த முயற்சி ஒருவர் சொன்ன தவறான கருத்தால் கைவிடப்பட்டது. யாப்பின் அடிப்படை அம்சங்கள் என்ன என்று, ஒருமுறை கேட்டுத் தெரிந்து கொண்டார். யாப்பை ஒரு சாத்திரம் என்ற அளவில் தெரிந்து வைத்திருப்பதில் தவறில்லை என்று அவர் கருதினார். புதுக் கவிதையில் யாப்பின்மை ஒரு அம்சமே தவிர யாப்பின்மையே புதுக்கவிதை ஆகிவிடாது என்று அவர் தெளிவாக்கியுள்ளார். மேலும் புதுக்கவிதை என்பது எல்லாக் காலத்திலும் இருந்து வந்ததென்பதையும் சங்க இலக்கியத்தில் சில கவிஞர்கள், ஆழ்வார், நாயன்மார்களில் சிலர், கம்பர், இளங்கோ இன்னும் சிலர் அவ்வக் காலத்துப் புதுக்கவிஞர்களாவர் என்றும் அவர்

எடுத்துக் காட்டியிருக்கிறார். இதனால் அவர் கருத்துப்படி புதுக்கவிதை காலபந்தம் அற்றதாகிறது. பழைய கவிஞர்களின் சொல், கருத்து முதலியவை க.நா.சு.வின் கவிதைகளில் அங்கங்கே பளிச்சிடுவதைப் பார்க்க முடியும். ஆனால் இச்சொற்களைக் கருத்துகளைத் தனது கவிதையில் புதுப் பயன் கொள்ளும்படியே அவர் வைத்திருக்கிறார். உதாரணமாகக் 'காண்' என்ற சொல்லைப் பட்டினத்தாரின் எதிரொலியாகவும் ஒரு சமயம் தனது சொல்லாகவும் அவர் பயன்படுத்தியிருக்கிறார். அவருக்கு மாணிக்கவாசகர், காரைக்காலம்மையார், தாயுமானவர் கவிதைகளிலும், வள்ளுவர், இளங்கோ இவர்களிடத்திலும் பெரிதும் ஈடுபாடு இருந்தது.

1938ஆம் ஆண்டிலேயே அவர் கவிதை எழுதத் தொடங்கியிருந்தாலும் 60-ன் இடையிலும் 70-ன் இடையிலும் மீண்டும் 80-ன் இடையிலும்தான் அதிகமும் எழுதினார் என்று தெரிகிறது. இதற்கிடையில் வளர்ந்து வந்த புதுக்கவிதைக்கு விமர்சகராகவும் மாறத் தொடங்கினார். இந்த விமர்சனப் பார்வையில் எழுத்து என்ற பத்திரிகையின் மூலம் தெரியவந்த பல கவிஞர்களை அவர் ஏற்க மறுத்தார். பிச்சமூர்த்தியின் கவிதைகளில் அவருக்குப் பலமான சந்தேகம் தோன்றியது. ஒருசமயம் பிச்சமூர்த்தியின் கவிதையை ஏற்கத் தயக்கமும், ஒருசமயம் அதுவும் ஏற்புடையதுதான் என்ற அரைகுறையான ஒப்புதலும் அவருக்கு இருந்து வந்தது. புதுக்கவிதை தொடக்ககால இயக்கத்துக்கு (இதை 1960-ன் தொடக்கம் என்றே கொள்ள வேண்டும். தமிழில் புதுக்கவிதைக்கு நூறாண்டுக்கு மேலான வரலாறு காட்ட முடியும். ஆனால் 1860இல் இரண்டொருவர், 1910-15இல் பாரதி என்று தனித்தனிக் கவிஞர்களின் ஆதர்சமாக இருந்து 1960இல்தான் பல கவிஞர்களின் பொதுநோக்காகப் புதுக்கவிதை மலர்ந்தது) உந்துதலாக பிச்சமூர்த்தி இருந்தார் என்ற அளவிலே அவருக்கு இடம் என்று க.நா.சு. முடிவுக்கு வந்தார். எழுத்துக் கவிஞர்களிலே பலரையும் அவர் பொருட்படுத்த வேண்டியவர்கள் அல்லர் என்று தள்ளியது, காலம் சரி என்று

ஒப்புக்கொண்டு விட்டது. இவர்களுக்குப் பதிலாக ஷண்முக சுப்பையா, சுந்தர ராமசாமி, நகுலன் ஆகியோரைப் புதுக் கவிஞர்களாக அவர் நினைத்தார். இந்த மூன்று பேரில் ஷண்முக சுப்பையா எழுதுவது நின்று போக அவருக்குக் கொடுத்த இடத்தைக் க.நா.சு. குறைத்துவிட்டார். அதே போல சுந்தர ராமசாமி பசுவய்யா என்ற பெயரில் எழுதிய கவிதைகளைக் குறித்த கண்ணோட்டமே அவருக்கு மாறி விட்டது. பிரமுகராகும் முயற்சிக்குக் கருவியாக கவிதையை யும், நாவலையும் பயன்படுத்துகிறார் என்றும், அவர் எழுத்து obtuse ஆக இருக்கிறது என்றும் கருதினார். எனது கவிதை களில் அவருக்கு மிகுந்த ஈடுபாடு உண்டென்றாலும் நகுலனையே முக்கியமாகக் குறிப்பிட்டார். முந்தைய சகாப் தங்களில் என்னையும் நகுலனையுமே அவர் எடுத்துக் கொண் டாலும் பின்பு வந்த கவிஞர்களில் பிரம்மராஜன், விக்ரமாதித்யன், சுகி ஆகியோரின் கவிதைகளில் அவர் ஈடுபாடு காட்டினார். ஆனால் அவருக்கு ஆத்மாநாமின் கவிதைகள் பிடிபடவில்லை. நா. காமராசன், மு. மேத்தா மற்றும் வைரமுத்து ஆகியவர்களின் கவிதைகளை அவர் வெறுத்தார் என்றே சொல்லவேண்டும். ஆனால் தற்பொழுது உள்ள கவிஞர்களில் பதினைந்து கவிஞர்களாவது அவருடைய கருத்துப்படி இன்றைய கவிதை இலக்கியத்தைப் படைக் கிறார்கள் என்று சொல்லலாம்.

க.நா.சு.வின் கவிதைகளில் பல, பழைய மற்றும் புதிய இலக்கியக் கோட்பாடுகளுக்கு எடுத்துக்காட்டாக அமையக் கூடும். புதுக்கவிதையின் மூத்த ஆசிரியர்களில் அவருடைய இடம் உறுதியானது. ஆனால் இந்த உறுதியை அவரது விமர்சனத் தோற்றமே பெரிதும் பாதிக்கிறது. சகல தரப்பின ரும் எதிரியாகத் தன்னைப் பாவிக்கும்படி அவர் செய்து கொண்டார். அவரை வெளியிட விரும்பாதவர்களின் தொகையை அவர் கூட்டிக் கொண்டார்.

பிறருக்கு உகக்காததைச்
சொன்னவருக் கென்று

ஒருதனி நரகம் உண்டென்றால்
அங்குதான் நான்போவேன்
அங்குள்ளவருக்கும்
உகக்காததைச் சொல்ல
எனக்குத் தெரியும். அங்
கிருந்து எங்கு போவேனோ
தெரியாது.

இந்தக் கவிதையில் க.நா.சு. தன்னைப் பற்றிய உண்மை யைத் தெரிவிக்கிறார். அந்த உண்மை உகக்காததைச் சொல்வதில் தன்னையும் மீறிய விதி போன்ற நிர்ப்பந்தம் தனக்கிருந்ததை அவர் உணர்ந்ததுதான். இந்தப் பண்பு அவரை முகஸ்துதி செய்யவோ விட்டுக் கொடுக்கவோ அனு மதிக்கவில்லை. ஆனால் அவர் தனது காலத்தவருக்கு உகக் காததைச் சொன்னவரே தவிர எதிர்காலத்தவருக்கல்ல. எதிர் காலத்தவர்கள் அதாவது அவரால் நேரிலோ மறைவாகவோ பாதிக்கப்பட்ட கருத்து ஊட்டம் இல்லாமல் முதலாவதாகப் படிப்பவர்கள் அவரது கவிதைகளை விரும்புவார்கள். அவரது கவிதையின் எளிமையையும், பட்டுப்போன்ற அதன் சருமத் தையும், கருத்தாழம் என்பதற்கு மாறான உணர்வாழத்தை யும் அவர்கள் உணர்வார்கள்.

க.நா.சு.வின் கவிதைகளைத் தொகுத்து வெளியிடும் ஞானச்சேரி பாராட்டுக்குரியதாகும். ஏனெனில் அவரை வெளியிடுவது வியாபாரம் அல்ல.

14-3-1989 ஞானக்கூத்தன்

# பொருளடக்கம்

# 1977ல் புதுக்கவிதை

ஆரம்ப காலத்தில் என் இலக்கிய அபிப்பிராயங்கள் என் தகப்பனாரின் நிழலில் வளர்ந்து உருவானவை. என் தகப்பனாருக்குக் கவிதை அவ்வளவாக உகக்காத விஷயம். அடிக்கடி ''கவிதையின் காலம் கடந்து விட்டது. இனி முக்கியமான, தரமான இலக்கிய முயற்சிகள் எல்லாம் வசனத்தில்தான் இருக்கும்'' என்று சொல்லுவார். கதைகளும், நாவல்களும் வருங்கால இலக்கியத்தின் முக்கிய துறைகள் என்று அவர் அடித்துச் சொன்னதை மறுத்துச் சொல்ல எனக்கு அப்போது personality இல்லை.

என் ஆரம்ப கால இலக்கிய முயற்சிகள் ஆங்கிலத்திலேயே அமைந்தன. ஆங்கிலத்தில் prosody படித்திருந்தாலும் கூட metrical pertternsசுக்கு உட்படாமல், அப்பாவுக்கும் தெரியாமல், நான் பல கவிதைகள் எழுதிப் பார்த்தேன். ஒரு கவிதையை என் காலேஜ் பத்திரிகை ஆசிரியரிடம் கொடுத்தும் பார்த்தேன் — We are the Free என்று தலைப்பு அதற்கு. ஆசிரியர் படித்துவிட்டு ''நன்றாக இருக்கிறது. ஆனால் யாரையும் பின்பற்றி அமைக்கவில்லையென்றால் அதை வெளியிட இயலாது'' என்றார். We are the free கவிதை ஆசிரியருக்குப் பிறருடையது எதையும் பின்பற்றித் தன் கவிதையை அமைக்க அவசியமில்லை என்று சாதுர்யமாகச் சொல்லிப் பார்த்

தேன். அவர் வெளியிடவில்லை. தொடர்ந்து பல கவிதைகள், காலேஜில் கடைசி வருஷத்தில் படித்துக் கொண்டிருக்கும்போது எழுதினேன் என்று நினைவிருக்கிறது. அதில் ஒன்று I am the centre of storm என்பது என் காலேஜ் நண்பர்களிடையில் ஒரு பரபரப்பையும் எனக்குப் புகழையும் தந்தது என்றும் நினைவிருக்கிறது. இந்தக் கவிதைகள் எல்லாம் என்ன ஆயின என்று எனக்குத் தெரியாது. எழுதுவதை ஏதாவது ஒரு நோட்புக்கில் பிரதியெடுத்து நோட்புக்கை எங்காவது விட்டுவிடுவேன். வாடகை தராத வீடு எதிலாவது போயிருக்க லாம்—கரையான் அரித்திருக்கலாம். எங்கே யாவது இன்னமும் இருக்கலாம். எனக்குத் தெரியாது; நான் கவலையும் படவில்லை.

ஆங்கிலம் எழுதுவதை நிறுத்திவிட்டு 1934ல் தமிழ் எழுத ஆரம்பித்த சமயத்தில் முதலில் கதைகள் எழுதினேன். பிறகு நாவல் எழுதினேன். மூன்றாவதாக 1936, 37ல் சுப்பிரமணிய பாரதியாரின் கவிதைகளைப் படித்த வேகத்தில் கவிதைகளையும் எழுத முற் பட்டேன். இந்தத் தடவை யாப்பிலக்கணம் கற்றுக் கொள்ளலாம் என்று நான் யோசித்துக் கொண்டிருந்த சமயம் ச.து.சு. யோகியாருடன் நட்புக் கிடைத்தது—புதுமைப்பித்தன் மூலம். அவர் சொன்ன ஒரு விஷயம் என்னை “யாப் பிலக்கணம் கற்றுக் கொள்ள வேண்டிய அவசிய மில்லை கவிதை எழுத” என்கிற முடிவுக்கு வரச் செய்தது. யோகியார் சொன்னார்: “எப்படி என்ன எழுதினாலும் அதை யாப்பிலக் கணப்படி இலக்கணம் சொல்லிப் பார்த்துக் கொள்ள முடியும்” என்றார். அப்படியானால்

யாப்பு இலக்கணம் படிக்க வேண்டிய அவசியம் என்ன என்று எனக்குத் தெரியவில்லை. கவிகள் யாப்பு படித்து எழுத வேண்டிய அவசியமில்லை; யாப்பு சரியாக இருக்கிறதா என்று பார்ப்பவர்கள் பண்டிதர்கள் இலக்கிய எல்லைக்கு அப்பாற்பட்டவர்கள் என்று எண்ணினேன்.

ஆங்கிலத்தில் free verse என்று சொல்லப்பட்டதற்குச் சரியான பதம் வசனகவிதை என்றுதான் நாங்கள் எல்லோருமே எண்ணியிருந்த ஒரு காரியம். பிச்சமூர்த்தி, கு. ப. ரா., புதுமைப்பித்தன் எல்லோருமே வசனகவிதை என்றுதான் அப்போது அதைக் குறிப்பிட்டார்கள் என்று நினைக்கிறேன். ஓரளவுக்கு முன் மாதிரியாகத் தமிழில் பாரதியாரின் காட்சிகளும் ஆங்கிலத்தில் Walt Whitman கவிதைகளும் பயன்பட்டன. நான் மேலே குறிப்பிட்ட நால்வருக்குமே T. S. Eliot படிப்பு உணடு. T. S. Eliot பற்றிய விமரிசனப் போக்கிலும் ஈடுபாடு உண்டுதான். ஆனால் T. S. Eliot செய்து கொண்டிருந்த முயற்சிகளை ஒட்டித் தமிழில் ஏதாவது செய்ய வேண்டும் என்கிற எண்ணம் ஏற்பட்டதில்லை. இதற்குக் காரணம் பல சொல்லாம்—இந்த நால்வரும் (என்னையும் சேர்த்துத்தான் சொல்கிறேன்.) தனித்வம் உடையவர்கள் — எலியட்டைப் பின்பற்றிக் கவிதை செய்து பார்க்க வேண்டிய அவசியமில்லை என்று எண்ணியிருக்கலாம். தவிரவும் அப்போது இந்தியாவில் எலியட் அவ்வளவாக ஏற்றுக் கொள்ளப்படாத கவி. பின்னர் 1942க்குப் பின்தான் எலியட் சர்வகலாசாலைப் பண்டிதர்களுக்கே தெரிய வந்தார் என்று சொல்லலாம்.

ஒரு சமயம் 1938ல் புதுமைப்பித்தன் ''வசனக் கவிதை என்பது குதிரையும் அல்ல கழுதையும் அல்ல கோவேறு கழுதை'' என்று சொன்னார். ''தாகுரின். வசனக் கவிதை முயற்சிகளே அப்படித்தான் எனக்குத் தோன்று கின்றன'' என்று நானும் சொன்னேன். இன்னும் வசன கவிதையை வேறு விதமாக அமைத்து வசனத்தின் தரமெல்லாம் உள்ள தாக, கவிதையின் லக்ஷியங்களையும் உள்ள டக்கிக் செய்ய முடியும் என்று நான் நம்புவதாக வும் சொன்னேன். இதன் விளைவாக முழு வதும் free verse 1938 கடைசியில் ஒரு இலங்கை நாட்டுக் கதையை வைத்து பேரன்பு என்று ஒரு நாடகம் எழுதினேன். எனக்குத் திருப்தியாக வந்திருந்தது எனினும் அதைப் புதுமைப்பித்தனிடம் காண்பிக்கவோ அல்லது வெளியிடவோ தைரியம் வரவில்லை. அதில் ஒரு பாட்டை மட்டும் சூறாவளி பத்திரிகை தொடங்கிய போது அதில் வெளியிட்டேன். அதைப்பற்றிக் கு. ப. ரா. உள்படப் பலர் விவாதம் செய்தார்கள். புதுமைப்பித்தன் அந்த விவாதத்தில் பங்கு கொள்ளவில்லை. ஆனால் அதற்கு முன் நான் எழுதிய ஒரு கவிதையை ஆண்டாள் என்கிற பெயரில் என் காதலன் என்று அவர் பதிப்பித்த ஒரு தினமணி ஆண்டு மலரில் வெளியிட்டார்.

இதற்குப் பின்னர் புதுமைப்பித்தன் வேளூர் பே. கந்தசாமிக் கவிஞர் என்கிற பெய ரில் கலா மோஹினியிலும் வேறு பல இடங் களிலும் கவிதை எழுதினார். அவர் அவற்றை வசன கவிதையாகக் கருதவில்லை. எழுதவு மில்லை என்பது உண்மைதான். ஆனால் free

verse என்பதில் அவருக்கு ஈடுபாடு இருந்தது என்பதும் உண்மைதான். ஏனென்றால் எலியட், பவுண்ட், மரியான்மூர் என்பவர்களுடைய கவிதைகளையும், e e. cummings என்பவருடைய நூல்களையும் நாங்கள் பல சந்தர்ப்பங்களில் சேர்ந்து படித்து விவாதித்திருக்கிறோம். அப்படிப்பட்ட ஒரு இயக்கம் தமிழ் இலக்கியத்தில் தேவை என்பதும் அவருக்கு உடன்பாடுதான். கம்பராமாயணத்தில் அவருக்கு மிக உகந்த பகுதியான யுத்த காண்டத்தில் பல பகுதிகளைப் படிக்கும்போது இதில் free verse வேகம் தொனிக்கவில்லையா என்று நான் கேட்டதற்கு, இது free verse இல்லாவிட்டாலும் free verseசின் உரம் இருக்கிறது என்று சொன்னார் ஒரு தரம். இது சந்திரோதயம் நடந்து கொண்டிருந்த சமயம் என்று எண்ணுகிறேன்.

தொடர்ந்து வசன கவிதை எழுத வேண்டும் என்கிற ஆவல் ஒரு பக்கம் எனக்கு இருந்த போதும் நான் ஒரு முயற்சியிலும் ஈடுபடாமல் இருந்து விட்டேன். எப்பவாவது ஒரு சிந்தனையைக் குறித்து வைப்பேன். அதோடு நின்று விடும். அதற்கப்புறம் நாவல், விமரிசனம் என்று காலம் சென்றுவிடவே கவிதை முயற்சிகளில் ஈடுபட எனக்கு அவசியமோ அவகாசமோ கிடைக்கவில்லை. ஆனாலும் சங்க இலக்கிய உலகத்தைக் கண்டு கொள்ள ஆரம்பித்தது முதல் நாம் free verse என்று மேலை

கள் திருவனந்தபுரத்தில் இருந்தபோது இது பற்றி டி. கே. துரைஸ்வாமியிடம் பேசியிருப்பதாகவும் நினைவிருக்கிறது.

திருவனந்தபுரத்திலிருந்து திரும்பிய பிறகு ஓரளவு விமரிசனத் துறையில் ஒரு நேர்க்குறிப் தோன்றலை இது பற்றி போதித்துக் கொண்டிருக்கையில் செல்லப்பாவின் எழுத்து முயற்சி உருவாகிக் கொண்டிருந்த சமயத்தில் 1958 கடைசியில் புதுக்கவிதையொன்று பெயர் கொடுத்து கவிதை முயற்சிகள் எந்தப் போக்கில் அமைய வேண்டும் என்று நான் எண்ணுகிறேன் என்பதையும் சொல்லி ஒரு கட்டுரை எழுதினேன். எலியட் போன்ற புதுக்கவிதைக்காரர் எலிஸபெத் காலத்து நாடகப் பேச்சுச் சந்தத்துக்கு ஆங்கிலக் கவிதையைத் திருப்பியது போல, எஸ்ரா பவுண்டு என்பவர் கவிதையைப் பொதுவாக பல பழைய தடங்களை நாடிச் செல்லச் செய்தது போல, தமிழில் புதுக்கவிதை சங்க காலக் கவிதைப் போக்குகளைப் பின்பற்றி, வசனத்தின் முக்கியமான அம்சங்களான தெளிவு, வலுவு, நேர்மை இவற்றுடன் செயல்பட வேண்டும் என்று வற்புறுத்தினேன். இந்தக் கட்டுரை சரஸ்வதியில் வெளிவருவதற்கும் எழுத்துவுக்கு போதுமான தரமுள்ள சிறு கதைகள் கிடைப்பதில்லை என்று சி. சு. செல்லப்பா சொல்வதற்கும் ஒத்துப் போயிற்று. அப்போது "சிறுகதை கிடைக்காவிட்டால் பாதகமில்லை

நான் நினைத்துப் பார்ப்பதில் புதுக்கவிதை என்கிற வார்த்தைச் சேர்க்கைக்கு ஏதோ மேதை, மேதாவித்தனம் அல்லது special மரியாதை இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. வசன கவிதை என்கிற வார்த்தை போதுமான தாக இல்லை என்பதனால் புதுக்கவிதை என்று 1930களில் கம்யூனிஸ்டுகளிடையே வழக்கி லிருந்த New verse என்கிற பதத்தை மொழி பெயர்த்துச் சொன்னேன்; அவ்வளவுதான். பெயரில் ஒன்றும் பிரமாதமான பாதிப்பு இருப்ப தாக எனக்குத் தெரியவில்லை. ஒரு புது மாதிரியான கவிதை முயற்சிக்குப் பெயர் சற்றுப் பொருத்தமாக அமைந்தது—வசன கவிதை, லகு கவிதை. சுதந்தரக் கவிதை என்பதைவிட இது ஏற்றதாக இருந்தது. பின்னர் செல்லப்பா வெளியிட்ட புதுக்குரல்கள் என்கிற நூலுக்கு அந்தப் பெயர் பொருத்தமாக அமைந்தது போல (அந்தப் பெயரிலும் விசேஷ மேதை அம்சம் ஒன்றும் இல்லை New verse New English poetry என்பதன் மொழி பெயர்ப்பே அது. அந்தப் பெயரில் எனக்குப் கொஞ்சம் சம்பந்தம் உண்டு என்றுதான் எண்ணுகிறேன்)

மேலே புதுக்குரல்கள் போக்கு, சரித்திரம் பற்றி இன்று படிப்பவர்களுக்குத் தெரியும். எழுத்துவின் முக்கியமாக பிச்சமூர்த்தியின் ஆதர வுடன் புதுக்கவிதை ஒரு உருவமும் வேகமும் பெற்றது. இந்த வேகமும் உருவமும் நான் எதிர்பார்த்ததில்லை என்று பல தடவைகளில் குறிப்பிட்டு வந்திருக்கிறேன். புதுக் கவிதை யின் முக்கிய அம்சங்கள் யாப்பின்மை மட்டு மல்ல—வசனத்தின் முக்கிய அம்சங்களான

என் கொள்கைகளுக்குட்பட்டுத்தான் யாரும் கவிதை செய்ய வேண்டும் என்று நான் எதிர் பார்க்கவில்லை. நானேகூட என் கொள்கை களுக்குள்ளே அடங்கிக் கிடக்கும் வகையில் கவிதை எழுதியிருக்கிறேனா என்று மயன் கவிதைகளைப் படித்துப் பார்க்கும் போது எனக்கே சந்தேகமாகத்தான் இருக்கிறது. ஆனால் நான் புதுக்கவிதை என்று சரஸ்வதி கட்டுரையில் குறிப்பிட்ட அடிப்படைகளில் கவிதை செய்து வருபவர்கள் என்று என்னால் சிலரை அடையாளம் கண்டு கொள்ள முடி கிறது—ஷண்முக சுப்பையா, பஸ்வய்யா, நகுலன், ஞானக்கூத்தன்—இவர்களில் முக்கிய மாக நான் நகுலனுடைய கவிதைகளைக் கருது கிறேன். என் கவிதைகளில் வைகுண்டம், ஆ என்று முடியும் கவிதை இவற்றில் புதுக் கவிதை அம்சம் என்று நான் ஏற்றுக் கொள்பவை அதிகமாக அடங்கியிருப்பதாக நான் கருது கிறேன்.

இந்நூலில் அடங்கியுள்ள கவிதைகள் பல்வேறு சந்தர்ப்பங்களில் பல்வேறு பத்திரிகைகளில் எழுதி வெளியிட்டவை. நான் எழுதிய கவிதை களின் பிரதிகளோ, வெளிவந்த பத்திரிகை களையோ நான் பாதுகாத்து வைத்துக் கொள்ள வில்லை. நம்மால் இவற்றைத் தேடிக் கொண் டிருக்க முடியாது என்று ஒரு சமயம் ஒரு புதுக் கவிதை நூல் வெளியிடலாம் என்று ஒரு 30 கவிதைகள் தயாரித்தேன். அதே அச்சேற்றும் சமயம், மனம் மாறிவிட்டது. நண்பர் முத்து சாமியிடமிருந்து, அது ஆக்ஸ்போர்டு யுனிவர் ஸிடி பிரெஸ் ஆர். பார்த்தசாரதியிடமும்,

கடைசியில் P. K. புக்ஸ் G.M.L. Prakash இடமும் போய்ச் சேர்ந்து அவையும் இந்நூலில் இடம் பெறுகின்றன. இந்த நூலைத் தொகுத்து வெளியிட மிகுந்த பிரயாசை எடுத்துக் கொண்ட G.M.L. Prakash அவர்களுக்கு என் நன்றி. அவரில்லாமல் மயன் கவிதைகள் நூல் உருப் பெற்றிராது என்பது நிச்சயம்.

டெல்லிக்கு வந்தபின் என் 57வது வயதில் புதுக்கவிதை முயற்சியாகவே என் சுய சரிதத்தை எழுதிப் பார்க்கலாமே என்று எழுதி னேன். அது காவியமாக 15 காண்டங்களில் 13000 வரிகளில் நீண்டது. அதை வெளியிடு கிறேனென்று எடுத்துப் போய் சில ஆரம்பப் பகுதிகளைக் கணையாழியில் வெளியிட்டார் அதன் ஆசிரியர்—நான் அதை அவர் பத்திரிகை தாங்காது என்று சொல்லியும் சில பகுதிகளை வெளியிட்டுவிட்டு நிறுத்தினார். அவருக்கும் எனது நன்றியை இங்கு தெரிவித்துக் கொள் கிறேன்.

பதினைந்து ஆண்டுகளுக்குப் பிறகு தமிழில் வெளிவருகிற என் முதல் தமிழ் நூல் இது. அதைப் பற்றியும் ஒரு வார்த்தை சொல்வது என் கடமை. இலக்கியம் எதுவுமே யாராவது படித்துப் பாராட்டிய பிறகுதான் இலக்கியமா கிறது என்கிற கருத்து எனக்கு உடன் பாடில்லை. நான் எழுதுவதில்—நல்ல காபி சாப்பிடுவதில் போல, அழகிய யுவதி ஒருத்தி யைப் பார்ப்பதில் போல, நல்ல நூல் ஒன்றைப் படிப்பதில் போல—ஒரு ஆனந்தம் இருக்கிறது. அந்த ஆனந்தம் என் வாழ்வை நிறைவுறச் செய்ய எனக்கு அவசியமாக இருக்கிறது. எழுது

கிறேன். தினமும், இடைவிடாமல் எழுது கிறேன் நான்—கவிதை, கதை, நாவல் விமரி சனம், சிந்தனைகள் எல்லாம் எழுதுகிறேன். இப்படி எழுதுவதிலே ஒரு விசேஷம் என்ன வென்றால் தமிழில் எழுதுவதில்—மற்ற மொழி களில் எழுதுவதைவிட — அதிக ஆனந்தம் கிடைப்பதாகத் தோன்றுகிறது. எழுதுகிறேன் தினம் எழுதுகிறேன். ஆங்கிலத்தில் எழுது வதிலும்—அவ்வளவில்லாவிட்டாலும் — சற்றுக் குறைவான ஆனந்தம் இருக்கிறது என்று கண்டு ஆங்கிலத்திலும் வேறு சில மொழி களிலும் கவிதைகள், கதைகள், நாவல்கள், விமரிசனங்கள் எழுதுகிறேன். ஆயினும் எனக் காகவே தான் எழுதிக் கொள்கிறேன். ஆனால் நான் எழுதுவதை நீங்களும் பார்ப்பதில் எனக்கு ஆட்சேபமோ சந்தோஷக் குறைச்சலோ இல்லை. அதனால் தான் G.M.L. பிரகாஷ் இந்த நூலை வெளியிடுகிறேன் என்று சொன்ன போது, முதலில் தயங்கினாலும், பின்னர் சம்மதித்தேன்.

என் கவிதைகளை நூலாகப் படித்துப் பார்ப்பது எனக்கே ஒரு நூதனமான அனுபவ மாகப்பட்டது. இது மற்ற கவிகளுக்கும் இப்படித்தானோ என்று எனக்குத் தெரியாது. (1977ல் பி. கே. புக்ஸ் வெளியிட்ட மயன் கவிதைகளில் எழுதியது.)

டெல்லி

க. நா. சுப்ரமண்யம்
24-1-1977.

# புதுக் கவிதையின் எல்லைகள்

கவிதையிலிருந்து புதுக்கவிதையை மட்டும் தனிப்படுத்திப் பேச வேண்டிய காலம் கடந்து விட்டது என்று எண்ணுகிறேன். புதுக்கவிதை என்று சொல்லும் போது ஷண்முகசுப்பையா, நகுலன், ஞானக்கூத்தன், இவர்களோடு மயன் (நான்) ஏற்படுத்தித் தந்த ஒரு மரபு சோதனைக் கட்டத்தைத் தாண்டி கவிதை என்கிற கட்டத்தை எட்டி விட்டது.

இன்றைய இந்தக் கவிதையின் எல்லைகள் என்ன என்பதை அறிந்து கொண்டு செயல் படுவது மிகவும் அவசியம். இந்தக் காலகட்டத் தில் மேலே கவிதை சாத்தியமாவதே இப்படி எல்லைகளை அறிந்து கொண்டதனால் ஏற் படுகிற காரியம் என்றுதான் சொல்ல வேண்டும்.

கவிதைக்கு எல்லைகள் உண்டா? உண்டா னால் அவை எதனால் எப்படியெப்படி ஏற் படுகின்றன என்று விசாரித்து அறிந்து கொள்ள வேண்டியது அவசியம். இந்தக் காரியத்தில் நமக்கு உதவக் கூடியவர்கள் என்று முற்காலத் தில் ஸமஸ்கிருத இலக்கியத்திலிருந்து கவிதை அழகுத் தத்துவத்தைக் காண முயன்றவர் களையும், இக்காலத்தில் மேலைநாடுகளில் செயல்பட்டு நம்மையும் எட்டியுள்ள அளவில் கவிதை விமரிசகர்களையும் மனத்தில் வாங்கிக் கொண்டு அதன் மேல் நமது கவிதைப்படிப்பை- பழசில் பரவலாக உள்ளதையும் புதுசில் எட்டிய வரையில் பார்ப்பதையும் — வைத்துக் கொண்டு சொல்லிப் பார்க்கலாம்.

இது ஒரு டெண்டட்டிவ்(Tentative)முயற்சி. இலக்கிய விஷயங்களில் தரம் பிரிப்பது. இது மேன்மையானது, இது மேன்மையை எட்டாதது என்று சொல்வதெல்லாம் ஒருவிதத்தில் 'டெண்டட்டிவ்' முயற்சிதான். எதைச் சொன்னாலும், அது முடிவாகத் தீர்மானமாகச் சொல்லப்பட்டது போலவே சொல்லப்பட்டாலும் அழுத்தமான முடிவு என்று சொல்லப்பட்டாலும் கூட, மறுமதிப்பீடு உண்டு. மேலே ஏதோ சொல்லலாம் என்கிற நினைப்பு கூடவே வர வேண்டும். அப்போதுதான் விமரிசனத்துக்கே ஒரு உரு, ஒரு கலை அடிப்படை ஏற்படுகிறது என்று சொல்ல வேண்டும். இதை நினைவில் கொண்டு கவிதை பற்றிச் சொல்லுகிற எதுவும் அந்த சமயத்துக்கு, அந்த ஆசாமிக்கு (சொல்கிற, சொல்லப்படுகிற, ஆசாமிக்கும்; மற்றவருக்கும்) அது முடிவாக இருக்கலாமே தவிர எல்லோருக்கும், எப்போதுமான முடிவு அல்ல என்கிற நினைப்புடன் விமரிசனத்தைக் காண அணுகுபவனுக்குத்தான் விமரிசனம் தன் முழுப் பயனையும் தருகிறது என்று நான் நினைக்கிறேன்...

கவிதையின் எல்லைகளைப் பற்றிப் பார்க்கலாம்.

கவிதைக்கு எல்லையுண்டா? அது எதனால் ஏற்படுகிறது என்கிற சிந்தனை அவசியம்.

கவிதையில் இந்த விஷயங்களைத் தான் சொல்ல வேண்டும், வேறு சிலதைச் சொல்லக் கூடாது என்றெல்லாம் நமது முன்னோர்கள் நம்பினார்கள். எழுதியும் வைத்திருக்கிறார்கள் என்பது தெரிகிறது. கவிதைக்கான விஷயம் என்று தனியாக ஏதோ இருப்பதாக ஏற்பட்ட

நினைப்பு இடைக்காலத்தில் எழுந்து பல இலக்கிய மொழிகளில் செயல்பட்ட விஷயம் என்று ஏற்றுக் கொண்டாலும் கூட, இன்று வரை, சமீபகாலம் வரை அப்படி ஒரு நினை விருந்து வந்திருக்கிறது. இந்த நினைவை 'வேளூர்கந்தசாமிக் கவிராயர்' (புதுமைப் பித்தன்) தனது 'மாகாவியம்' என்கிற கவிதை யில் எடுத்துச் சொல்லிச் சாடியிருக்கிறார். இந்தியாவில் கவிதைக்கு விஷய எல்லை என்பது தமிழில் புதுமைப்பித்தனுடனும், ஹிந்தியில் ஆக்யேயாவுடனும், மற்ற மொழி களில் வேறு பலருடனும் உடைந்து விட்டதாகத் தெரிகிறது. எனினும், அப்படி ஒன்றும் விஷய எல்லை என்பது செயல்படவில்லை என்று சொல்ல முடியாது.

உதாரணமாக, ந. பிச்சமூர்த்தியின் புதுக் கவிதைகளை எடுத்துக் கொண்டால் பழைய கவிதையின் விஷய எல்லை சிறப்பாகவே செயல் படுவது தெரிகிறது. இது கவிதை மரபு எல்லைகளை மீறி வரவில்லை என்பதும் தெரி கிறது. பாரதியாரிலும் இந்த விஷய எல்லை கள் மீறப்படவில்லை என்றாலும் கவிதை என்கிற அளவில் அவர் வசனகவிதைகள் உருவ மும், ஆழமும் பெற்று விடுகின்றன. அப்படிப் பிச்சமூர்த்தி கவிதையில் அமையவில்லை என்ப தால் இப்போது 'ந. பி.'யின் கவிதைகளைப் படிப்பவன், 'இது கவிதை அல்ல' என்கிற தீர் மானத்துக்குத் தான் வர வேண்டியதாக இருக் கிறது. புதுக்கவிதையல்ல, கவிதையாக இருக்க லாமோ என்கிற நினைப்பும் போகக் கவிதை யாகவும் அமையவில்லை என்கிற நிச்சயம் இன்று ஏற்படுகிறது.

காமராஜன், வைரமுத்து, மேத்தா போன்ற வர்கள் பிச்சமூர்த்தியைப் பின்பற்றுவதாகச் சொல்லிக் கொள்வதில்லை. ஆனால் அவர்கள் கவிதைகளிலும் உள்ளடக்கத்தில் வேண்டு மென்றே அவர்கள் புரட்சி செய்வதாக முயன் றாலும் ஏற்றுக் கொள்ளப்பட்டதைப் புரட்டிப் போட்டு, எதிர்மறையாக எதுகை, மோனை, சிந்தனை என்றில்லாமல் சொன்னாலும் அவை யும் கவிதையாக அமையவில்லை என்று காண முடிகிறது. பிச்சமூர்த்தி, கண்ணதாஸன் இரு வரும் விஷய எல்லைகளைப் பழைய அளவில் ஏற்றுக் கொண்டதாலேயே கவிதை என்று செய் தாலும் அவர்களுக்குக் கவிதை கைவரவில்லை என்று சொல்ல வேண்டும். ஜனங்கள் பாராட்டு கிறார்களே என்று சொல்லாதீர்கள் — கவி தையை ஜனங்கள் பாராட்டித்தான் ஆக வேண்டும் என்கிற கட்டாயமும் கிடையாது! ஜனங்களையும் மீறித்தான் கவிதை எந்த அள விலும் சொல்லப்படுகிறது.

பழைய கவிதை விஷய எல்லைகளை ஏற்றுக் கொண்டு சிறப்பாக கவிதை — புதுக் கவிதையாகவே — செய்ய முடியும் என்று செய்து காட்டியவர் ஷண்முகசுப்பையா. பிச்சமூர்த்தி புதுக்கவிதை செய்ய ஆரம்பித்த இரண்டாவது காலக்கட்டத்திலேயே இவரும் புதுக் கவிதை எழுத ஆரம்பித்தவர். பிச்சமூர்த்தியை முன் மாதிரியாகக் கொண்டு எழுதி ஓரளவுக்கு வெற்றி கண்டவர்கள் பலர். தி. சோ. வேணு கோபாலன், வைத்தீசுவரன் போலவே இவரும் கொஞ்ச காலத்துக்குப் பின் கவிதை செய் வதையே நிறுத்திக் கொண்டு விட்டார். ஆனால், எழுதியவரையில் விஷய எல்லைகளை

மீறி, புதுக்கவிதைகளை கவிதையாகவே செய்து காட்டியவர் ஷண்முகசுப்பையா என்பதற்கு அவருடைய ஒவ்வொரு கவிதையையுமே உதாரணமாக எடுத்துக் காட்டலாம். நாய்க் காட்சி, காவற்காரன் முதலிய கவிதைகள் சிறப் பான உதாரணங்களாக அமைகின்றன.

கவிதைக்கு விஷய எல்லைகள் பற்றி நிறையவே சொல்லலாம். ஒரு விதத்தில் விஷயம் பற்றி எல்லை இல்லை என்பதும் உண்மை. எல்லை உண்டு என்பதும் உண்டு. கவி அனுபவத்துக்கு உட்படாத விஷயம் என்று உலகில் எதுவும் இருக்க இயலாது. இதனால் தான் 'குண்டகர்' என்கிற சமஸ்கிருத காவிய விமரிசகர் யதார்த்தமில்லாமல் இலக்கியமே இல்லை என்கிறார். கனவுலக இலக்கியமும் கூட உண்மையில் யதார்த்தத்தில் ஒட்டிக் கொண்டு உயிர் பெற்றிருப்பதுதான் என்கிறார். யதார்த்தத்தைக் கட்டி வைத்து விட்டுக் கவிதை செய்ய எவராலும் முடியாது. 'வில்லியம் கார்லாஸ் வில்லியம்ஸ்' என்கிற அமெரிக்கக்கவி இதையேதான், 'கவிதை என்பது அது சுட்டிக் காட்டுகிற பருப்பொருள்களில் தான் இருக் கிறது' என்கிறார்.

இந்த நினைப்பு வருவதற்கு முன் 'சாஸர்' காலத்திலிருந்து ஷெல்லி, கீட்ஸ் வரையில் கவிதையில் விஷயம் என்கிற எல்லை பலவிதங் களில் ஆங்கிலக்கவிகளிடையே ஆட்சி செலுத்தி யிருக்கிறது. லிரிகல், மெடாபிஸிகல், ஸடைரிக், ரொமாண்டிக் என்று பல தளங்களில் விஷய எல்லைகள் கவிதையை ஆண்டு வந்துள்ளன. பத்தொன்பதாம் நூற்றாண்டில் விஷய எல் லைக் கொடுங்கோன்மை விட்மனின் கவிதை

களில் மாறுவதைப் பார்க்கிறேன். 'Where Lilacs last in the Door yard blooded' என்பதிலிருந்து 'Song of India' போன்ற கவிதைகளில் பார்க்கலாம். எட்கார் ஆலன் போவின் கூற்று, ''ஒரு நீளக் கவிதை என்பது சாத்தியமல்ல'' என்பது விஷய எல்லையை எதிர்த்துச் சொல்லப்பட்டது என்று தான் நினைக்கத் தோன்றுகிறது. 'போ'வை சரியாகப் புரிந்து கொள்ளவில்லை என்று குற்றம் சாட்டப்படுகிற போதலேர், மல்லார்மே, ரிம்போ என்பவர்கள் சரியாகப் புரிந்து கொண்டுதான் ஐரோப்பாவில் புதுக்கவிதைக்கு அடிக்கல் நாட்டினார்கள் என்றும் சொல்ல வேண்டும்.

கவிதைக்கு எல்லைகளை வகுப்பது விஷயத்துக்கு அடுத்தபடியாக மொழியாகும். இந்த மொழியென்பதில் உள்ளவை மரபு, பிராந்தியப் பண்பாட்டின் பழக்க வழக்கங்களில், மதப்போக்கின் விளைவு, இது எல்லாமாகச் சேர்ந்து கவிதைக்கு ஒரு எல்லையை, பல எல்லைகளை, விதிக்கின்றன என்பது சொல்ல வேண்டிய விஷயம்.

கவிதை மொழியால் எல்லை வகுக்கப்படுகிறது என்பதைத்தான் கவிதையை மொழிபெயர்ப்பது கடினம் என்றும், சாத்தியமே இல்லையென்றும் கூறி நாம் சுட்டிக் காட்டுகிறோம். மொழியில் வார்த்தைகளுக்கு அர்த்த பாவங்கள், புனை கற்பனைகள் ஏற்படுவது பிராந்திய மதப்பழக்க வழக்க அடிப்படைகளில் ஆகும். இதை மொழி பெயர்த்துத் தருவது சிரமமாக இருக்கிறது.

கவிதையின் சரித்திரத்தை நோக்கினால் அது மிகவும் சிக்கலான மொழிப் பண்பாட்டு

மதச் சிக்கலிலிருந்து விடுபட்டு மொழிக்கு அப்பாற்பட்ட ஒரு சுதந்திரத்தை நாடியே செல்ல முயன்றிருக்கிறது என்று சொல்லத் தோன்றுகிறது. குறுகிய அளவில் இலக்கணம், செய்யுள் போக்கு என்று ஏற்பட்ட விதிகள் மட்டும் மொழி எல்லைகள் அல்ல. நல்ல கவிஞன் எவனும் இலக்கண விதிகளாலோ, செய்யுள் மரபாலோ தடுத்து நிறுத்தப்படுவதில்லை. அதை சுலபமாகவே அவனால் மீறிவிட முடியும். ஆனால் மொழி, பண்பாடு, கலாச்சாரம், மதம் விதிக்கிற விதிகளை, எல்லைகளை மீறுவது அத்தனை சுலபத்தில் நடக்கிற காரியம் அல்ல.

கிரேக்க கவிகளில் தொடங்கி, சமஸ்கிருத, தமிழ், அராபிய, பர்சிய ஹீப்ரு கவிகள் எதை எடுத்துக் கொண்டாலும் அவற்றில் மொழி பண்பாடு கலாச்சாரக் கட்டுப்பாடு சிறப்பாகவே தெரிகிறது. எனினும், இந்தக் கட்டுப்பாடுகளை மீறி கவிதை செய்யவே எந்த மொழிக் கவிஞனும் கவிதை செய்கிறான். எல்லைகளை மீறுகிற ஒரு காரியத்தில் தான் கவிதையே பிறக்கிறது என்றுகூடச் சொல்லலாம். இதையே 'கவிதைத் த்வனி' என்று ஆனந்தவர்த்தனர் சொன்னதாக ஏற்றுக்கொண்டால் கூடத் தவறில்லை என்று எனக்குத் தோன்றுகிறது. கவிதை மொழி, பண்பாடு, கலாச்சாரம் இவற்றிற்கெல்லாம் அப்பாற்பட்டு கவிதைத் த்வனி ஏற்படுகிற போதுதான் வார்த்தைகளிலும், வார்த்தைகளுக்கிடையில் உள்ள மௌனத்திலும், அர்த்தங்களிலும், அர்த்தங்களுக்கிடையே உருவாகிற அர்த்தங்களுக்கு அப்பாற்பட்டதிலுமே கவிதை உருவாகிறது. இதையே

பின்னர் தோன்றிய குண்டகர் 'வக்ரோக்தி தனிமைப்பட்டது. யாருக்கும் அதுவரை கை வராதது' என்று சொன்னார். மொழி, பண்பாடு, கலாச்சாரம் எல்லோருக்கும் கைவந்தவை. இவைகளைத் தாண்டி, இவைகளைப் புறக்கணித்து விடாமல் 'வக்ரோக்தி' சாத்தியமாகிற போது தான் கவிதை உண்டாகிறது.

விஷய எல்லைகளையும், மொழி பண்பாடு கலாச்சார எல்லைகளையும் மீறிக் கவிதை செய்ய முயல்பவர்கள் அவரவர் காலத்துப் புதுக்கவிதைக்காரராக இருந்திருக்கிறார்கள். திருவள்ளுவர் அவர் காலத்தில் புதுக்கவிதைக் காரர். சீவகசிந்தாமணி ஆசிரியர் அவர் காலத்தில் புதுக்கவிதைக்காரர். சிலப்பதிகார ஆசிரியர் அவர் காலத்தில் புதுக்கவிதைக்காரர். பாரதியார் அவர் காலத்தில் புதுக்கவிதைக்காரர். பாரதிதாஸனோ, கண்ணதாஸனோ இந்தக் கணக்கில் அகப்படவில்லை. நகுலனும், ஷண்முக சுப்பையாவும், மயனும், இன்று ஞானக்கூத்தனும் புதுக்கவிதைக்காரர்களாகச் சொல்லப்படுகிற போது இவர்கள் மொழி பண்பாட்டுக் கலாச்சார இலக்கண செய்யுள் மரபை மீறிச் சிலது செய்ய முன்வந்தார்கள் என்பது முக்கியமான விஷயம்.

வால்ட்விட்மனும், பாடலேர், மல்லார்மே, ரிம்போ போன்றவர்களும், வசனகவிதையில் சுப்ரமணிய பாரதியாரும் செய்ய முயன்றது இதுவேயாம். கவிதையின் மொழி இத்யாதி எல்லைகளை உணர்ந்து அவற்றைமீறிச் செயல்பட்டுக் கவிதை செய்யவே அவர்கள் முயன்றார்கள்.

இன்னொரு விஷயமும் நினைவில் கொள்ள வேண்டும். சங்கீதத்தை மொழியைக் கடந்த கலையாகச் சொல்லுகிறார்கள். சங்கீதத்தின் மொழி பிரபஞ்சம் முழுவதுக்கும் உரியது என் கிறார்கள். இது காரணமாகத்தானோ என்னவோ, மொழிகளால் எல்லைகள் வகுக்கப் பட்ட கவிதை சங்கீதத்துடன் சேரும் போது பிரபஞ்ச பாஷையாக மாறி விடுகிறது என்று ஒரு மரபு நம்மிடையே ஏற்பட்டிருக்கிறது. ஈஸ்வரனுக்கு அர்ப்பணமான கவிதையெல்லாம் எந்த மொழியில் சாகித்யம் இருந்தாலும், சங்கீதத்துடன் பக்தியும் சேரும்போது பிரபஞ்ச மொழியாகி விடுகிறது என்றும், பாடப்படுவதே கவிதையின் இலக்கு என்றும் இடைக்காலத்தில் ஏற்றுக் கொண்டுள்ளார்கள். இது ஒரு இந்திய மரபு என்றாலும் பரவலாக உலகம் பூராவிலும் கூட இந்தச் சிந்தனை இருக்கிறது.

ஜெயதேவர் அஷ்டபதியில் இசையையும், கவிதையையும் சேர்த்த போது சமஸ்கிருத கவிதை தரம் குறைய ஆரம்பித்து விட்டது என்று சுப்பைய தீக்ஷிதர் என்கிற மொழிப் பண்டிதர் சொல்லுகிறார். இது அவ்வளவாக ஏற்கப்படாத ஒரு இந்திய மரபு. ஆனால் இப்படியும் ஒரு சிந்தனை இருந்தது என்பது தெரிகிறது.

விட்மன் தொடங்கி, பாரதியார் வசன கவிதைகள் மூலம் தமிழர்களை எட்டிய புதுக் கவிதையில் இசையம்சம் குறைவு என்பது சொல் லாமலே தெரிகிறது. இந்த, இசையை விட்டுக் கவிதையைப் பிரித்துக் காண்பதை உலகில் பல மொழி புதுக்கவிதைகளில் காண முடிகிறது. புதுக்கவிதை என்கிற முயற்சியேகூட ஒரு விதத்

தில் கவிதைக்கு ஒரு பிரபஞ்ச அணி அலங்கார அடிப்படையை ஏற்படுத்தித் தருவதாக வைத்துக் கொள்ளலாம். பழைய அணி அலங்காரங்கள் எல்லாம் மொழியளவில் வருபவை. அவை ஒரு சார்பு எல்லைகளைக் கவிதைக்கு வகுத்துத் தருகின்றன. அதை மீறிக் கவிதை செய்வது, எல்லைகளைத் தாண்டி வருவது புதுக்கவிதையில் உபயோகப்படுகிற அணி அலங்காரங்களினால், அவை மொழிச் சார்பாக அமையாமல் வந்தால், சாத்தியமாகிறது.

புதுக்கவிதை இயக்கம் உலகில் பெருமளவிற்குக் கவிதையை இசையின் பிடியிலிருந்து தளர்த்திவிட முயலுகிறது. புது அணி அலங்காரங்கள் புதுக்கவிதைக்குத் தேவைப்படுகின்றன. இவை மொழி மூலமாக ஏற்படாமல் விஞ்ஞான சிந்தனையும், இன்றைய தத்துவ தரிசனம், மதமறுப்பு, இவற்றின் மூலமாக ஏற்பட்டு, சங்கீதத்தில் போலக் கவிதைக்கும் ஒரு புதுப் பிரபஞ்சமொழிக்கு—மொழிகளைக் கடந்த மொழிக்கு—ஏற்பாடு செய்து தரலாம் என்றுதான் தோன்றுகிறது.

மூன்றாவதாகக் கவிதைக்கும் — புதுக்கவிதைக்கும் ஏற்படுகிற எல்லைகள்—கவிதையை வாசகர்களின் எதிர்கொள்ளும் சக்தியிலிருந்து விளைகின்றன என்பது வெளிப்படை. இதை கம்யூனிஸக்காரர்கள் தான் முதன் முதலில் இக் காலத்தில் இனம் கண்டு சொன்னவர்கள். மக்கள் இலக்கியமே இலக்கியம் என்கிற கோஷம் இதன் விளைவு. இலக்கியத்தை கவிதையை ஏற்றுக் கொள்ளும் தரத்தை மக்களிடையே குறைத்துவிட வழிகள் செய்துவிட்டு உயர் கவிதை வரவில்லையே என்று அழுதால், கூட

அழலாமே தவிர வேறு எதுவும் செய்ய இயலாது. கவிதையை எதிர் கொள்பவர்களின் மனோ நிலை, ரஸப்பக்குவம் எப்படி இருக்கிறது என்பது தமிழில் நிதரிசனமாகவே தெரியக் கிடக்கிறது.

'சோஷியாலஜியில் ஆய்வுகள்' என்று மக்களிடையே நடத்தி இந்த மனப்பக்குவம், ரசனை அனுபவம் எப்படி எப்படி மாறுகிறது, உருப்பெறுகிறது என்று மேலைநாடுகளில் பார்க்கிறார்கள். இப்படிப்பட்ட ஆராய்ச்சிகள் ஒன்றும் நம்மிடையே மேற்கொள்ளப்படவில்லை.

ஆனால், சமஸ்கிருத ஸாஹித்திய அழகுத் தத்துவ சாஸ்திரிகள் ஸஹ்ருதயர்கள் என்று ஒரு சிந்தனையை எடுத்துச் சொன்னார்கள். கவி சமைப்பவனே போன்ற வாசகர்கள் தான் ஸஹ்ருதயர்கள் என்று சொல்லப்பட்டவர்கள். கவி காரியம் என்பது சமைப்பதற்கும், ஏற்பவனுக்கும் (உண்பவனுக்கும்) பொதுவாக வைத்து அவர்கள் கணித்தார்கள். அதாவது, நல்ல இலக்கியம் படைக்க எந்த மாதிரியான குணாதிசயங்கள், மேதை-அம்சங்கள், தேவையோ அந்த அளவு வாசகர்களுக்கும் குணாதிசயங்கள் மேதை அம்சங்கள் தேவை என்று அவர்கள் அன்றே கண்டு சொன்னார்கள்.

இதன் உண்மையை நாம் காண்கிறோம். இன்று சினிமா பார்ப்பவர்களுக்கு வைரமுத்து கவியாகக் காட்சியளிக்கிறார். அன்று சினிமா பார்த்தவர்களுக்குக் கண்ணதாஸன் கவியாகக் காட்சியளித்தார். குமுதத்தில் படித்து, புரியவில்லையே என்று குழம்புகிறவனுக்கு குமுதம் தனுக்குக் கவிதை கவிதையாகவே படுகிறது.

ஆனால், புதுக்கவிதை கவிதையாகவே மாறிச் செயல்படுவதை மயன், ஷண்முக சுப்பையா, நகுலன், ஞானக்கூத்தன் என்று மரபிலும் அவர்களை ஒட்டிப் பின்வருகிற இருபது, முப்பது இன்றைய கவிகளிலும் காண்கிறோம். இப்படியே தான் போய்க் கொண்டிருக்க வேண்டும் என்பதல்ல விஷயம்; இதைவிட மேலாகவும் வர வேண்டும் என்பதுதான் எல்லைகளைப் பற்றிச் சிந்திக்க வேண்டிய விஷயம் வரும். காலதேவன் அப்படியொன்றும் லோபியல்ல.

ஆனால், கவிதை என்பது கவிதைக்கு ஏற்பட்ட எல்லைகளை மீற முயலுகிற போதுதான் கவிதையேயாகிறது. 'இப்படிப்பட்ட கவிதையில் நல்ல கவிதை, கெட்ட கவிதை, புதுக் கவிதை, பழங்கவிதை என்று எதுவும் கிடையாது. கவிதை மட்டும் உண்டு' என்று 'வக்ரோக்தி ஜீவிதம்' ஆசிரியர் சொல்லுகிறார். அது உண்மை என்றுதான் தோன்றுகிறது.

ஒரு நல்ல வாசகன் இருந்தால் போதும். அவன் ஸஹ்ருதயப் போக்கினால் கவிதை உண்டாகி விடும் என்பது இலக்கிய அனுபவமாகத் தெரிகிறது. நல்ல வாசகன் நல்ல கவிதைகளைப் படித்து ஸஹ்ருதயனாகிறான். ஆதாரம் முதல் கோழியா முட்டையா என்கிற விசாரணை போன்றது இது. இரண்டும் அவசியம் என்பது எல்லைகளை வகுக்கிறது.

[1986இல் சிடாடெல் வெளியீடான "க.நா. சுப்ரமண்யம் கவிதைகள்" என்ற நூலில் க.நா.சு. எழுதியது.]

# மணப்பெண்

திரையிட்டு மறைத்த முகமும்
பெண்மை ஏசும் பட்டாடையும்
மறைத்து வைக்கும்
உண்மை அறியாவண்ணம்—
அழகி என்று
அவளை அறிவ தெப்படி?

அவள் அழகி—
ஆடை உடுத்தி
அழகு படுத்தி
அலங்கரித்து
மணமேடை யேற்றிக்
கண்டின் புற்றது
நாங்கள்.

அவள் அழகைத்
திரையிட்டு மூடுவானேன்?

அழகு கண்டு
கண் மங்காதிருக்க—
அவன் அதிர்ஷ்டங் கண்டு
பிறர் பொங்காதிருக்க.

பின் அவளழகை
உரக்கப் பாடுவானேன்?

பாட்டை நம்புவார் யார்?
வெறும் சொல்லடுக் கென்று
எண்ணி ஏமாறுவார்
யாருமே என்று
அவளழகைப் பாடுவோம்.

○ 24

நாரியர் புடைசூழ
மேக மண்டலத்தில்
மின்னென நடக்கிறாள்—

மாலை வானத்திலே
மின்னும் சுடரெனவே
மணவறை சேருவாள்—

அவன் கூடுவான்
அழகுடன்
அழகு பொருந்த.

'சூறாவளி'
*14.5.1939*

# மின்னல் கீற்று

புழுக்கம் தாங்காமல் அன்றையத்
தினசரியை விசிறிக்

கொண்டே நடந்தேன்; இந்தப்
புழுக்கத்திலே மழை

பெய்தால் நன்றாக இருக்குமே என்று
நான் நினைத்தேன்.

தலையுச்சியிலே ஒரு குளிர் தூற்றல்
— ஆஹா! இன்பம்!

சட்டச்சட! பத்துத் தூற்றல்கள்
—ஆஹா! ஆஹா!

பத்தே பத்துத் தூற்றல் தான்
—பின்னர் புழுதியைக் கிளறிய

காற்று விசிற மழை ஓடி நகர்ந்து
விட்டது கரியவானம்

பிளந்து கொண்டு கோடை மின்னல்
கீற்று என்னைத் தேடிற்று

கையை நான் நீட்டியிருந்தால்
அக்கோடைமின் கீற்று

என்னைத் தொட்டிருக்கும்; உலகை
அழித்திருக்கும்;

தினசரிச் செய்திகள் அற்றிருக்கும்;
தூற்றல் இன்பம்

மரத்திருக்கும்; புழுக்கம் வெளி
நிறைந்திருக்கும்; புழுதி

எழுந்து படர்ந்திருக்கும்; உலகம்
ஒழிந்திருக்கும். நான்

தனியிருந்து என்ன செய்வதென்று
கை நீட்டாதிருந்தேன்.

'சரஸ்வதி
20.9.1958

# இரைச்சல்

எங்கேயோ எட்டாத் தொலைவில்
உருண்டு வரும் மீனதுவும் உலகை
யெலாம் எழுப்புறது, புல் வளரும்
வேகம் அது சந்தை இரைச்சலிலும்
பெரிதாகிக் கேட்கிறது. கிழவன் ஒருவன்
பக்கத்த றையிலே குந்தி அழுகிறான்.

யாரோ ஒருத்தி உதடசையாதவாய்
வம்பால் பெருந் தீ ஏற்றி வைத்தாள்;
மூண்ட குருக்ஷேத்திரம் காலத்தின் சந்து
பொந்துகளிலே ஓடி ஒலிக்கிறது.
குழந்தை யொன்று தொட்டிலில் கிடந்து
மெல்ல உதடசைத்து ஊரை யெழுப்புறது.

மரங்கள் துளிர்க்கும் ஓசை, பூக்கள்
பூக்கும் ஓசை, புழுக்கள் காலை உணவு
அருந்தும் ஓசை—இப் பேரிரைச்சலில்
என் சிந்தனைத் தேர் ஓட மறுத்துக்
கிறீச்சிட்டு அசைந்தாடி நின்று அதிர்
வேட்டும் உலுக்குமரமும் கேட்கிறது.

'சரஸ்வதி'
*10-10-1958*

## பேச்சாளர்

எனக்கு முன்னே எத்தனையோபேர்
இருந்தாரப்பா—பேச்சாளர்
என்று பெரும் பெயர்சொல்லி. ஆனால்
என்னைப் போல
வேறு ஒருவரை நான் யாங்கணுமே,
என்றும் கண்டதில்லை,
கேட்டதில்லை.

பாராட்டா, கண்டனமா? நினைவுநாள்
தானா? பாரதி பிறந்த
விழாவா? கலைமகள் நூலிழந்த நாளா?
எதுவானால் என்ன?
பேசுவதற்கோ என்னிடம் விஷயமுண்டு—
சொன்னால் அடியேன்
தயார், தயார்.

முருகன் புகழ் பாடவேண்டுமா? சைவ
ஞான சாரந்தன்னைக்
கசக்கிப் பிழிந்து உருத்தெரியாது ஓட்டி
உருட்ட வேண்டுமா?
நாரணன் புகழ்தான் நவில வேண்டுமா?
எது வேண்டும் உமக்கு,
சொல்லும், சொல்லும்.

அமிழ்தென்னும் தமிழின் தொன்மை
பறைசாற்ற வேண்டுமா?
முன்னென்றும் பின்னென்றும் எதைப்
பற்றி யார் அறிவர்?
போட்டுப் புரட்டி ஒரு மணி நேரம் ஓடவைக்க
வல்லேன் கண்டாய்
நானே வல்லேன்.

மாலையை ரெடி பண்ணி வையும். பெரியவர்
நாலு பேரைக்
கூட்டும்—சபை திரட்டும். ஐந்தரை மணிக்
கூட்டத்துக்கு ஆறு
மணிக் கெல்லாம் வண்டியை ஞாபகமாய்
அனுப்பிவிடும்.

நான் தயார்.

மேடைப்படி யேறும்போது ஆர்த்தசபைத்
தரமறிந்து பேச
வல்லேன்; கவலையே வேண்டாம்.
கைதட்டா தவர் எவரும்
வெளியேற முடியாது. எத்தனையோ
அப்ளாஸ் வாங்கி எனக்குப்
பழக்கமுண்டு.

குறள் பத்துப் பாடமுண்டு. கீதையிலும்
ஒன்றிரண்டு
தெரியும். பாரதியார் பாடல்களில்
ஆங்காங்கே சில மனப்
பாடமுண்டு. வேறுபல நூல்களும் நான்
பார்த்ததுண்டு—
பார்த்ததுண்டு.

ராமனும் கண்ணனும் நம் பொதுஉடமை
காண்—எடுத்து
வீசலாம். என்போன்றவருக்கு அவர்களைப்
போல உதவுபவர் யார்?
எத்தனையோ கதைகள் நான் கேட்டதுண்டு,
நீரும் கேட்டிருப்பீர்—
மீண்டும் கேளீர்.

பிறருக்கு எடுத்துரைக்க நீதிகளுக்குத்
தானா இந்தத் தரும
நாட்டிலே பஞ்சம்? ஊருக்கு நல்லது
சொல்லவும் தெரியாதா?
எதை எப்படி எழுத வேண்டும் என்று
புத்தி சொல்ல என்னைப் போல்
வேறு யாரே?

இலக்கியக் கூட்டமானால் மிகச் சுலபம்
கம்பனும் என்னிடம்
பாடம் கற்றுச் செல்லலாம். ஆரம்பித்து
விட்டால் ஓய
மாட்டேன். தொல்காப்பியத்தில், சங்க
நூலில் இல்லாதது என்ன—
யாரே கண்டார்?
அரசியல் பிரசங்கமோ தண்ணிபட்ட பாடு,
நேற்று பாகிஸ்
தானில் நடந்ததற்கு கம்ப ராமாயணத்தி—
லிருந்து மேற்கோள்
ஆதாரம் என்னால் காட்ட இயலும்—
ஆதாரம் ஆயிரம்
உண்டு உண்டு.
ஆர்த்த சபைக்குகந்தது சொல்லத் தெரியும்.
அத்துமீறாது
பேசி, பழக்கப்பட்ட ஹாசியங்களுக்கு
அப்ளாஸ்கள்
ஓராயிரம் வாங்கிடுவேன். சபை விரும்பு-
வதையே சொல்வேன்
சொல்வேன்.
சபையொன்று கூட்டும். என்னைப்பேச
நீர் அழையும். உமக்கும்
லாபமுண்டு. சுலபமாகவே பெரியமனிதனாகி
விடலாம். ஆயிரம்
ஜோடிக் கைகள் தட்டிய டேப்ரிகார்டுகள்
என்னிடம் இருபது
உண்டு, உண்டு.
என்பேச்சை யாரும் ரிகார்டு செய்ததில்லை
அந்தக்கை
தட்டல்தான் எனக்குத் தன்னம்பிக்கை
யூட்டும் என்று நானே
எடுத்து வைத்திருக்கிறேன். அடிக்கடி
போட்டுப் பார்ப்பேன்.
கேளும்! கேளும்!

'சரஸ்வதி'
*25-10-1958*

# நினைவுச் சுவடு

நீள நினைவுக்கும் முடிவேது? கணக்கிலாத
பழம் ஏடுகள் பல

புரட்டி நினைவுப்பாதை வகுத்து நினைவுச்
சுவடோடு ஓடி

எத்தனையோ மங்கலான, அருவங்கள் பலவும்
எழுப்பி

ஏற்றிவைத்த ஒளிகாணாத விளக்கிது காண்-
என் உள்ளம்

மரமென்றும், மலரென்றும் குழந்தை குமரி
யென்றும்

தீ வான் விளிம்பென்றும், பலசுடர் விட்டு
எல்லாமும்

ஒரு புள்ளியில் உள்ளடக்கி புள்ளிக்குள்
மையத்தில்

மறைந்து தேய்ந்து இல்லாமற் போவதும்
விந்தையே!

சுழலவிட்ட கோளதுவாய் குரல்கூவிக் கிழித்துக்
கோடுகள்

பலவும் காலத்திலே கீறி அறியாத விசையாலே
உருண்டோடி

கீழ்மேல் மேல்கீழாய், நடுவது பக்கமாய் பக்கம்
நடுவாய்

ஆழிஆழி உருட்ட வேகம் கெட்டே நினைவும்
அழிந்ததே.

மலர்ந்தமிழ்ந்த நினைவும் காலமெனும் கன
வினிலே

கருத்தவிந்த காட்சியும், நெஞ்சம் நினைத்து
உருவு தந்ததே!

'சரஸ்வதி'
25 10 1958

# கவிதை

எனக்கும்
கவிதை பிடிக்காது, மனிதன் எத்தனையோ
எட்டுக்கள் எடுத்து வைத்துவிட்டான்; இவற்றில்
எத்தனை எட்டுக்கள் கவிதையால்
சாத்திய மாயின

என்று யார்
தீர்மானித்துச் சொல்ல இயலும்? பின்
எதற்காகத்தான் கவிதை தோன்றுகிறது ?
மொழியின் மழலை அழகு தான்.
ஆனால் அது போதவே

போதாது.
போதுமானால் கவிதையைத் தவிர வேறு
இலக்கியம் தோன்றியிராதே. போதாது
என்று தான், ஒன்றன்பின் ஒன்றாக
இத்தனை இலக்கியத்

துறைகள்
தோன்றின—நாடகமும், நாவலும், நீள்
கதையும், கட்டுரையும் இல்லாவிட்டால்
தோன்றியிராது; ஆனால் அவையும் தான்
திருப்தி தருவதில்லையே !

அதனால்
தான் நானும் கவிதை எழுதுகிறேன்.
மனிதனுக்குக் கலை எதுவும் திருப்திதராது
மேலே, மேலே என்கிற ஏக்கத்தைத் தான்
தரும். கலையின்



○ 32

பிறப்பு
இந்த அடிப்படையில் ஏற்படுவது. கடவுளே
இன்னமும் உயிர்வைத்துக் கொண்டிருப்பது
இந்த அடிப்படையில் தான் சாத்தியம்.
என்று சொல்லலாம்.

*'எழுத்து'*
*ஜனவரி 1959*

## போதுமோ ?

''அறம் வெல்லும் பாவம்
தோற்கும் என்னும் ஈது
இயம்ப வேண்டும் தகையதோ ?''

உலகத்துக் கவிகளெல்லாம்
இயம்பி உழன்று அலுத்து
அரற்றியதும் இது தானோ ?

அவரில் அறம் என்ன, பாவம்
என்ன என்று அறுதியிட்டு
முடித்துத் தந்தவரும் யார்சொல் ?

வார்த்தைக்கு வேகம் தந்து
கவிசெய்த வல்லவரே வேகம்
மட்டும் போதுமோ ? போதுமோ ?

***'எழுத்து'***
***ஏப்ரல் 1959***

# விளையாடும் பூனைக் குட்டி

மல்லாந்து படுத்துக் கால்நீட்டிக்
குறுக்
கிக்கயிற்றின் நுனியைப் பல்லால்கடித்திழுத்துத்
தாவி எழுந்து வெள்ளைப்
பந்தாக
உருண்டோடிக் கூர்நகம் காட்டி
மெலிந்து சிவந்த நாக்கால்
அழுக்குத் திரட்டித் தின்னும்
பூனைக்குட்டி—
என்னோடு விளையாடத் தயாராக
வந்து நின்று, என் கால்களின் உடம்பைச்
சூடாகத் தேய்த்துக் கொண்டு நிமிர்ந்து
அறிவு ததும்பும் கண்களுடன் என்னைப்
பார்க்கிறது. அப்போது நான்
சிலப்
பதிகாரம் படித்திருந்து விட்டேன்.
பின்னர்
நான் அதை விளையாட
''மியாவ் மியாவ் ஓடி வா''
என்று கூப்பிடும் போது நின்று
ஒய்யாரமாக ஒரு பார்வையை என்
மேல் வீசிவிட்டு மீன் நாற்றம்
அடிக்கும் கொட்டாவி விட்டுக் கொண்டே
அடுப்படியிலே போய்ச் சுருண்டு படுத்துக்
கொள்கிறது
பூனைக்குட்டி.

'எழுத்து'
எப்ரல் 1959

# பரம்பரை

பிறருக்கு உகக்காததைச்
சொன்னவருக் கென்று
ஒரு தனி நரகம் உண்டானால்
அங்குதான் நான்
போவேன்.

அங்குள்ளவருக்கும்
உகக்காததைச் சொல்ல
எனக்குத் தெரியும். அங்
கிருந்து எங்கு போவேனோ
தெரியாது.

கடை விரித்துக் கேட்பார்
இல்லாது போனவர் எத்தனையோ
பேர், ஊருக்கு உகக்காததைச்
சொன்ன பரம்பரை — அது
பெரிது காண்.

*'எழுத்து'*
*ஜூன் 1959*

# ரகஸ்யம்

தலை வாசலிலே
தங்கி நிலைக்காது
ஓடிவிட்டால்
ஒழிந்து விடுமோ?

மறைத்து வைத்து
மரத்துப் பேசி
என்ன பயன்!
என்ன முடிவு!

உடம்புக்கோ
ஒன்பது வாசல்
வாசலுக்கோர்
வாசனை.

நடமாடும்
நந்தவனம்
கூட வரும்
மலர்களிவை!

'எழுத்து
ஜூலை 1959

# தரிசனம்

(1)

என்னென்ன செய்ய எப்படிச் சொல்ல
போவென்றழைத்து வாவென்று வெருட்டி
ஏதென்று காட்டி இரென்று மறைந்த
எத்தனையோ சர்ப்பங்கள் பின்னிக் கிடக்க
ஆரென்று கேட்பார் ஆருமில்லா அல் அசல்
தாண்டியே
கோபுரத் தடியில் அங்காந்து நின்று வாய்
பிளக்கக் கல்லிடுக்கில் ஈரங்கண்டு ஊன்றி
முளைத்தெழுந்த அரசவேர் தபஸாக
நின்று நிலைத்துத் தேங்கி ஊரார் கூடி
அரசவை ஏச தடியெடுத்த தண்டல்
நாயகன்
தணிந்து வந்து பேச வம்பும் வீச்சும்
ஷோக்குப் பேச்சும் பொங்கி ஓங்கிட
தலைகீழ் மோன வௌவால் சிறகடித்துப்
பறந்து வானவெளி பாய இடிந்தது
கோபுரம் காண். அரச வேர் நிலை
பெயர்ந்து
தாவி வானத்தில் ஊன்றிப் புதுவேர் விட்டது
காண். அதன் இலைகள் என்முடியைத்
தடவின. வௌவால் சிறகடிக்கத் தரை
மட்டமான கோபுரம் இதோ. இதோ
குப்பைக் கோபுரம்—புழுதித் தேர்—
இடிசல்!

(2)

கோபுரம் தகர்ந்திடிலென் வௌவால்
பறத்திடிலென், அரசவேர் பெயர்ந்திடில்
என்? கண்முன்னே — மனக்கண்முன்னே
கோயில் ஒன்றுண்டு, என்றென்றுமுண்டு.
அழிவற்றது. இடமற்றது. உருவற்றது
காண்!

நடனமாடும் சிவனையும் படுத்துறங்கும்
விஷ்ணுவையும், ஏடெடுத்து எழுதும்
பிரும்மனையும் — அதாவது என்னையும்
அக் கோயிலுக்குள் காணலாம்; சொன்னேன்.

மனம் எனும் படியேறி, தான் எனும்
பிராகாரம் சுற்றி, விளக் கெனும்
நம்பிக்கை விட்டு, நாத்திகம் எனும்
மந்திரம் பல சொல்லி, காலமெனும்
கல்லிடறி, மனிதன் எனும் பயிர்
பாலித்து, உடல் எனும் எருவிட்டுக்
கோயில் காண்பாய், மூச்சும்
கோயில். உள்ளுள்ள காற்றும் வெளியும்
கோயில். எதுவும் கோயில் கண்டாய்!

(3)

இருட்டிலே இருட்டாய், பர வெளியிலே
வெளியாய், ஒளியில் ஒளியாய், நீரிலே
நீராய், நெருப்பிலே சுடுதீயாய், பயததிலே
பயமாய், பக்தியிலே அதுவுமாய்
விரிந்தது, விண்டது, வியாபித்தது காண்
உள் அறை. கோயிலின் சிலையையும்
உன்னையும் என்னையும் உள் அறையில்
காண்பாய், நாபிக் கொடி பிணைக்கிறது.
அறுத் தெறிந்து விட்டுக் கட்டுப் போடுவாய்.

அத்துடன் தீர்ந்ததென்று எண்ணுவாய்
அப்படி எண்ண வொண்ணாதே. உள் நின்ற
புகை மூட்டமும், ஒளி வேகமும், சிவ்வென்று
வீசிப் பறக்கும் காலக் கறப்பும், தங்க
வில்வ தளமும், பட்டுக் கயிறும், சந்தனப்
பூச்சும் கையடங்கி உருவெடுத்து, உரு
வடங்கி, உருவம் தப்பி நிற்கும் வெளியும்

உள்ளும் அதுவேயாம். அது அவனாகும்
விந்தை, அவன் நானாகும் விந்தை,
இரண்டும் மூன்றும் நான்கும் ஆகும் அவர்
கண்ணை மூடினால் விரியுது உலகம்-
விரிந்தது விண்டது தீ மூண்டது கடலும்.
அனலாடுது கங்கை. சாடுது வேகம்
கிடுகிடென்று ஒலிக்குது வானம்,
கண்டேன் கண்கொண்டு காண இயலாததை!

தூபப் புகையில் உருவமும் அருவமும்
ஒன்றானது
கண்டேன், நிழலாடும் யாளித் தூணிலே
வாடிவிழுந்த மலரிதழிலே, இருட்கல்சிலைக்
கப்பாலுள்ள பாழிலே கண்டேன், கண்டேன்.

(4)

மூச்சுத் திணறி முட்டி முடங்க வெளியேறி
மூன்று பிராகாரம் சுற்றி வந்தால் பசி எடுக்கும்.
கால் வலிக்கும் நேரம் போகும், தென்னண்டைக்
கோடியிலே கிளிகள் பல கொஞ்சும்,
வடவண்டைப்
பாரிசத்திலே மான்குட்டி ஒன்று காண்பீர்,
இல்லாத மதில் மேலே இருக்கிறது ஓர் மயில்
கீழண்டை வாசலிலே ஆனை ஆனை ஆடுது.
மேலண்டை வாசலிலே கட்டாத கோயிலின்

எட்டாத சிலைகளைக் கல்தச்சன் உளி
கொண்டு செதுக்குகிறான், மணற் பரப்பிலே
முன்னோர், உடன் இருப்பவர், பின் வருபவர்
வந்தவர், போனவர், வரப்போகிறவர்
எல்லோருடைய காலடிச் சுவடுகளும்
நீள ஓடுகின்றன பார்— ஏடுகளை புரட்டும்.
உம் ஏடும் உண்டு. அகப்படும் பொய்யில்லை
இது புரட்டில்லை, காலத்திலே உள்ளதெலாம்,
இங்கு முண்டு, தப்பித் தாண்ட முயலாதீர்
—பயன் எதுவும் இல்லை, மெள்ள மெள்ளக்
காலூன்றி நடக்கலாம். கால்கடுக்கட்டும்,
பசி எடுக்கட்டும், நேரம் நிற்கட்டும்,
நிற்கட்டும்!

(5)

ஆயிரம் ஆயிரங்கால் பூச்சியாய்த் திசை
எங்கும் கைகள் நீட்டிக் காத்திருக்குது—
வலை வீசி அயர்ந்திருக்குது அசுரச் சிலந்தி
தப்புவதும் எங்கே?
காற்றும் அதுவாய் வானும் அதுவாய்
வெளியும் அதுவாய் காலமும் அதுவாய்
நானும் அதுவாய் அழிந்ததற் பின்
தப்புவதும் ஏனோ?

*'எழுத்து'*
*பிப்ரவரி 1959*

# வைகுண்டம்

வைகுண்டத்து
வாசல்
செல்லரித்தது
போக
பாக்கி
க்றீச்
சிட்டுத்
திறந்து
நிற்க
சிங்க
ராச்சாரி
யார் — யார்
அவர் ? அவர்
யாரோ —
தெரு
வெல்லாம்
மூ
ஞு
வ
ரி
சை
க்யூ
நிற்க
ஆண்
டொன்
றொன்
றொன்
றாகக்
கழிய

ஐம்
பத்
திரண்டும்
போக
எஞ்சி
ய
இரு
பத்
தெட்டும்
நீண்டு

வை
குண்டத்து
வாசல்
செல்லரித்தது
போக
பாக்கி
கூட்டத்திலே
அவளை
கை
விட்டு விட்டேன்
— நழுவி
விட்டாள் —
கண்ட
துண்டோ
ஜெகத்தீரே

பட்டினிப்
பட்டாளம்
தின்று
ஜெரித்து
த்வாதசி
கண்டதோ !

எனை
விட்டு
எங்கேயோ
நீங்கிப்
போனாளே
ஐயகோ !

எனத்
தேடி
வந்த
சோமுவும்

வை
குண்ட
வாசல்
க
டந்து
(முதல் அடி
கால்
தடுக்க)
உள்
நின்று

பிம்ருதி
ப்பார்க்க
காணாது
கண்டு
கண்டது
கொண்டு

செல்
போக
பாக்கி

○ 44

சாத்திய
கதவும்
கா
லால்
உதைக்கத்
திறக்கும்
ஏனோ
காத்
திருக்கிறீர் ?

ஏனோ
காத்
திருக்கிறீர் ?

ஏனோ
நாளும்
கோளும்
ஏனோ
மீனும்
வானும்
நேரம்
தேதிக்
கணக்
கெடுத்து

நிகர
லாபமும்
எண்
பத்தி
நாலு
ஆண்டு

என்று
கண்ட
வைகுண்டம்
வாசல்
திறக்கும் —
துருப்
பிடித்துக்
க்றீச்சிடும் !

தாண்டி
விட்டால்
பிம்ருதி
ப்பார்க்க
இயலாது
ஏலாது

— யார்
தெருவிலே
மு
ப்
ப
து
வ
ரி
சை
க்யூவும்

கூடி
விட்டது
காண் !

வைகுண்ட
வாசல்
தாண்ட

○ 46

செல்
லரித்த
கன
மான
மரம்
கதவாய்க்
கிறீச்சிட

காத்
திருந்த
க்யூவும்
கரையாது —
கரையாது
காண் !

'இலக்கிய வட்டம்'
27.3.64

## 'ஆ' என்றுமுடியும் கவிதை

எல்லை
யில்லாதோர்
தொல்லையிலே

வரம்பில்லாத
தோர் வேண
கிரியிலே

வந்து
போன
தோர்

ஆன்ம
விருத்தி
அரவணைப்பிலே

காய
கல்பம்
செய்யு

மோர்
குருவின்
காலடியிலே

எழுந்து
துடித்த
தோர்

○ 48

வேகம்
கெட்ட
வேகம்

கொடுத்
துதவு
மானால்

எங்கு
நின்று
எங்கு

போய்
அடங்கி
மூளும்

உறவு
என்பது
எப்படியோ

கயிறு
கயிறாகத்
திரியும்

வேண
மட்டும்
எட்டும்

சொல்லத்
தெரியாத
அகராதி

விளிம்பிலே
அனு
பங்கத்திலே

புத்தக
மார்ஜினிலே
அட்டைக்கும்

அப்பாலே
காணாதது
கண்டு

எட்டாதது
எட்டி
சொல்லாதது

சொல்லி
புரியாதது
புரிந்து

ஒட்டாதது
ஒட்டி
ஓடாதது

நிற்க
நிற்காதது
நிலைக்க

நிலைக்காதது
நீள
உருண்டு

திரண்டு
உருவம்
அருவம்

பெற
அற்று
விழ

எப்
பப்
படியோ

ஒத்தை
வழிப்
பாதை

அது
போனால்
மீளாது

மீண்டால்
காணாது
கண்டால்

மறையாது
கண்ணுக்
குள்ளே

குத்திச்
சொருகி
விடும்

மறக்காத
மோனம்
சிறக்காத

ஒலி
அகராதி
அற்று

ஒழிந்த
சொல்
கற்றுத்

தெளிந்த
குழப்பம்
துயரத்தின்

முடிவு
எல்லைக்
கோடிட்டுக்

காட்ட
கூட்டியதும்
அற —

அறம்
செய்வது
மற்று

இன்பம்
கண்டது
வீடு

துன்பம்
விண்டது
மிச்சம்

சொச்ச
மெல்லாம்
உருட்டித்

திரட்டி
மனித
உருக்

கொண்டு
எழுந்து
நின்று

கூத்தாட
கூனிகள்
கூடி

ஆடக்
கோயில்
யாளி

எட்டித்
தூணில்
சாய்ந்து

அசைந்து
நின்று
துதிக்

கை
நீட்டி
விழுங்க

முயல
கல்லும்
சாந்தும்

கண்ணும்
கற்பனையும்
— ஐயோ !

அலறி
வீழ்ந்து
கண்

மூடிப்
பக்தி
ஒழுக

கருங்கல்
கடவுளைக்
கை

தொழ—
தொழு
தெழ

மெய்
விதிர்த்துக்
கண்

ணீர்
சோர
ஊற்றுப்

பெருக —
பாட்டும்
பெருக

போதுமே
ரெண்டு
வரி !

என்னையும்
போலவே
நிறையப்

பாடினார்
பாடினார் —
பாடி

ஆடினார் —
ஏனோ
ஆடினார் !

○ 54

எல்லை
யில்லாத
தொல்லை

பக்திப்
பொய்யை
மெய்

என்று
நம்பி —
எத்தித்

திரிந்து
எடுத்
தோதி

ஓதியவர்
பெரியவர்
காண் —

இக்
காலப்
பிரஹ்லாதன்

காண் —
என்று
முருகன்

அருள்
வேட்டு.
வேட்டு.

வெத்து
வேட்டு
சப்தம்

ஒலி —
எவ்வொலிக்கும்
நயம்

ஒன்று
உண்டு —
கண்

சொருகி
டேப்
ரிகார்டார்

விசை
தட்டி
விட

மனப்
பாடம்
உருண்

டோட
மணிக்
கணக்

காகுமது
கண்டு
பேச

அழைப்பார்
ஓராயிரம்
பேர்

காண் —
டேப்
சுற்றி

வரும்
சுற்றி
வரும்

சுற்றி
வரும்
சுற்றிச்

சுற்றி
வரும்
நாலாவது

பேச்சும்
பன்
னிரண்டாவது

பேச்சும்
ஒன்றே
காண் !

இடையி
லுள்ள தெல்லாமும்
அஃதே !

அலையும்
ஜலமும்
ஒன்றே

காண் —
பாம்பும்
பழுதையும்

ஒன்றே
காண் —

குடமும்
ஒன்றே
காண் !

நீயும்
நானும் —
ஆ !

இலக்கிய வட்டம்
*24.4.64*

○ 58

எங்கேயோ
தேடிவந்து
எப்படியோ
எட்டி விட்டார்.

கையில் அகப்
பட்டதை விட்டு
விடவா மனசு
வரும்! கெட்டி

யாகப் பற்றிக்
கொண்டார் —
வீம்பு பேசுகிறார்
தேடிக் கண்டேன்

வேறுயார் தான்
காண்பவர் என்பார்
— கண்டது என்ன
என்று தான்
விளங்கவில்லை.

இலக்கிய வட்டம்
*27.3.64*

# பல்லியும் முதலையே

பல்லியும் முதலையே
பாட்டும் மோனமே
வாழ்வும் சாவிலே
இருளும் ஒளியில்தான்.

தொலைவும் அருகிலே
எல்லையும் கண்ணில்தான்,
வட்டமும் மையப்புள்ளியிலே
புல்லும் மூங்கிலே

உள்ளதும் மாயமே காண்
உடையதும் இலாததுவே
கசப்பதும் சர்க்கரைதான்
உண்மையும் பொய்யலவோ

பல்லியும் முதலையே
புல்லும் மூங்கிலே.

இலக்கிய வட்டம்
*19.6.64*

○ 60

பல்லியும் முதலையே
புல்லும் மூங்கிலே
மனிதனும் தெய்வமே

தெய்வமும் மனிதனே
மூங்கிலும் புல்லுதான்
முதலையும் பல்லியே.

# பட்டிமன்றம்

நாணற்
பந்தல்
கால்
தூக்கி

பட்டு
விதானம்
கவிழ்த்
தமைத்து

அழகான
பேப்பரிலே
நிழல்
நிரல்

தீட்டி
ஆணோ
பெண்ணோ
இரண்டு

மன்றோ,
வாலியோ
சுக்ரீவனோ
வீடணனோ

மந்தரை
சூர்ப்பணகை
மண்டோதரி
சீதையோ

இலக்குவனோ
ஒட்டடையோ
சிலந்தியோ
விளக்குமாறோ

நானோ
அவனோ
இவனோ
பெரியவன்

சொல்மின்
சொல்மின்
முழங்குமின்
போரிடுமின்

என
விளித்துக்
கூட்டம்
கூட்டி

பந்தர்
கம்பன்
புகழ்
பாடி

கிழட்டுக்
கன்னித்
தமிழ்
பாடி

நடுவர்
பெரியவர்
பேராசிரியர்
சிலர்

தூக்கி
ரெண்டும்
சொல்லலாம்
மூணும்

சொல்லலாம்
நாலுமே
சொல்லலாம்
எனச்

சொல்ல
முடிவு
அறிந்து
கை

தட்டி
மகிழ
நேரம்
இரு

பத்தி
ரெண்டு
நாழி
செல

கால
க்ஷேபம்
நடத்தி
விழா

வெடுக்கும்—
எடுத்துத்
திருப்தி

பட்டி
மன்றத்
தாடுகள்
ஒரு

வழி
போக
அவ்
வழியே

எல்லா
ஆடுகளும்
போய்ப்
போய்

வர
கம்பன்
கவியினை—
அவன்

பாடாததும்
உள்படத்தான்—
லைத
ழ்கீ

பாடமாகச்
சொல்லிச்
செவி
செவிடுபட

முழங்கும்
முழக்கு
முக்காரத்திலே
கம்பனே

வந்து
கண்டால்......?
''காண
வேண்டிலேன்

காவியம்
ஏனோ
எழுதினேன்?
காப்பாற்று

சரஸ்வதி
ஏழை
என்தனை''
என்று

முறையிட்டு
ஏடுகள்
எல்லாம்
எழுத்தாணி

கொண்டு
கிழித்துப்
போடுவான்
''புத்தி

கெட்டுக்
கவிதை
எழுதினேன்
விடுமையா!

தமிழ்க்
கவிதையைத்
தப்பி
ஓட

எனக்குத்
தஞ்சம்
ஓர்
இடம்

தா!
தெய்வங்காள்”
என்று
வேண்டுவான்.

*இலக்கிய வட்டம்*
*20.11.64*

## பிரச்னோத்ரம்

கே—எங்கே சென்றாய்?
என்ன கண்டாய்?

ப—சென்ற விடமெல்லாம்
சொல்லி மாளுமோ!
கண்டதை யெல்லாம்
விண்டு சொல்லவோ!

கே—நான் சென்றதும், நான் கண்டதும்
ஒப்பிடுவேன் நீ சொல்
எங்கே சென்றாய்,
என்னென்ன கண்டாய்?

ப—அங்கே போனேன்
இங்கே போனேன்
எங்கும் போனேன்
அலைந்தழிந்தேன்.
ஆனால்
எங்கு போனால் என்?
உடன்
வந்தது
நானே யலவோ!

கே—அதனால்?

ப—கண்டதெல்லாமும்
என் கண்கள்
கண்டவைதான்
நினைத்ததெல்லாம்
நான் என் மனது
கொண்டு நினைத்தது

அதுவே தான்!
வேறு எங்கு செல்ல
என்ன காண!

கே—காட்சிகள் வேறு வேறு
அலவோ—கண்டவனும்
வேறு அலவோ?

ப—அது தெரியாது எனக்கு.
ஆனால்
நான் அங்கு கண்டதும்
இங்கு கண்டதும்
ஒன்றே தான்
மனிதனின் சிறுமையும்
பெருமையும்
கண்டேன்
சிறுமை கண்டு
என் சிறப்பு எண்ணி
மகிழ்ந்தேன்;
பெருமை கண்டு
அஞ்சி நடுங்கினேன்.

கே—அஞ்சி நடுங்குவானேன் ?

ப—சிறுமை நமது
சுபாவம், அந்தச்
சுபாவம் மீறி
வாழக் கட்டாயப் படுத்தப் பட்டால்?

கே—யார் நம்மைக் கட்டாயப் படுத்துவார்கள்?
நாமே பெருமையை வருந்தி
அழைத்தால்தான்
வரும் வம்பெல்லாம்—இல்லையோ?

ப—அதுவும் உண்மையே!
என் பயம் வீணானதுதான்
உணருகிறேன்

கே—நினைவுகள் எத்தனை
எத்தனை கொணர்ந்தாய் ?

ப—ஒரு முட்டை

கே—பெரிசா? சிறிசா?

ப—கனம் என்றால் கனமேயாம்;
லேசென்றால் லேசேயாம்.
என்னைத் தவிர
என் நினைவுகளில்
யாருக்கு
என்ன அக்கறை ?

கே—நான் வாஷிங்டனிலிருந்த போது
என்ன நடந்தது தெரியுமா?

ப—நான் கேட்கவில்லையே!

# பயணம்

''அவசரமென்றாலும் கூட
நான்
ஏரோப்ளேனிலோ
எக்ஸ்பிரஸ் ரெயிலிலோ
பயணம் போவதை
விரும்பமாட்டேன்.
கட்டுச் சாதம்
கட்டிக் கொண்டு,
போகும் வழியெல்லாம்
சண்டை சச்சரவுகள்
சல்லாபங்கள்
தொடர்ந்துவர
பயணம்
செய்வதே
பயணம்.
எந்தப் பயணமும்
பதினாலு ஆண்டுகளுக்குக்
குறைந்ததாக
இருக்கக்கூடாது,
அப்போதுதான்
ராமன்
அயோத்தி
திரும்ப இயலும்''

'கசட தபற'
ஏப்ரல் 72

# மதுரை மீனாஷியின் கன்னிமை கழியும் போது

1

மதுரை மீனாஷியின்
கன்னிமை கழியும் போது
அகத்தியன் தெற்கே வருவான்—
பொதியலின் தமிழ்த்தாலாட்டில்
தூங்கிப் போவான்—
அப்போது தமிழ்
அவன் கைவிட்டு
ஓடிப்போவாள்.
அப்போது
கல் யாளிகள் கிளம்பிக்
கூத்தாடும்—
கொட்டைகள் ஊசலாடக்
குதிரைகள் கோயில் கூரையை
அந்தரத்தில்
தொங்கவிட்டு விட்டு
மேலமாசி வீதியிலே
பவனி வரும்.
பாண்டு வாத்தியம் டபடபவென
முழங்க
சினிமா வண்டிகள்
செய்தியை ஊரெல்லாம்
எடுத்துச் செல்லும்.
சூடான இட்லியும் பாலும்
காலியானதை
சாம கானமாக
தேவ தூதர்கள்

எடுத்தோதுவர்.
குண்டோதரன்
பசித்து வருவான்.
மதுரை மீனாஷியின்
கன்னிமை கழியும்போது.

2

கன்னிக் குமரியவள்
கணவனை எதிர்பார்த்து
ஏமாந்து நிற்க
அவனை மீனாஷி
மதுரையிலே தடுத்து
நிறுத்திக் கொண்டாள்.
ஆனால் அவனோ
''நான் மதுரை வரையில் கூடச்
சென்றதில்லையே.
நின்ற இடத்திலேயே
நிமிர்ந்தாடும் நான்
ஒற்றைக் காலால்
சிற்றம்பலம் வந்ததே
பெரிசு'' என்று
குரல் எழுப்புகிறான்.
''நான்
ரெயில்வே லைனைக் கடந்திருந்தால்
தத்துவப் பேராசிரியனாகியிருப்
பேனே!''
என்று அங்கலாய்க்கிறான்.
ஆனால்
தத்துவத்துக்கும்
கல்வி இலாகாவிற்கும்

நாமம் சாத்தத் தயாராக
வேங்கடவன்
வடவெல்லை விட்டிறங்கி
வகுப்பில்
உறங்கிவிட்டுத்
தெற்கே வந்திருப்பானோ?

3

தெய்வங்கள் நிலைபெயர்ந்து
நடமாடத் தொடங்கிவிட்டால்
எங்கே
யாரைத் தேடிக் காண்பது?
''வீட்டில் இல்லையவன்''
என்று பூசாரி சொன்னால்
நம்பிவிட வேண்டுமா ?
நம்பத் தொடங்கினால்
மிச்சம் என்ன ?
பெரியாரும்
கிருபானந்த வாரியும்
கருணாநிதியும்
தானே!

'அஃ'
74.

# சிருஷ்டி

கண்களிலே ஒரு குரும்பு
இதழ்க்கடையிலே ஒரு அலட்சியம்
மனத்திலே ஒரு வேகம்
சொற்களிலே ஒரு அமைதி
செயல்களிலே ஒரு அவமதிப்பு
முத்திரைகளிலே ஒரு அயர்வு
நடையிலே ஒரு வேகம்

இப்படி ஒரு மனிதனைச் சிருஷ்டித்து
நடமாட விட்டேன்
அவனால் ஒரு ஐம்பது ஆண்டுகள்
தாக்குப் பிடிக்க முடியவில்லை

கண்களிலே ஒரு ஏக்கம்
மனத்திலே பேராசை
எல்லோருக்கும் நல்லவனாக
இருக்க ஒரு வேகம்
சொற்களிலே அர்த்தமற்ற
பதட்டம், செயல்களிலே
ஒரு வேகமின்மை
முத்திரைகளிலே ஒரு அழகு

இப்படி ஒருவனை நடமாட விட்டேன்
அவன் முப்பதாண்டுகளில்
தீர்ந்து விட்டான்

அலுத்துப்போய்
கண்களிலே குருட்டுத்தனமும்
மனத்திலே ஒரு சிந்தனையில்லாமையுமாக
முத்திரைகளிலே முடிவு காட்டும் சக்தியும்

நடையிலே பெருமிதமும்
சொற்களிலே அடை மொழிகளுமாக
போக்கிலே ஒரு சாதாரணத்வமுமாக

ஒரு மனிதனை நடமாடவிட்டேன்
அவன் எண்பது ஆண்டு உயிர் வாழ்ந்தான்
அதில் முப்பது ஆண்டுகள் அறிஞனாகவும்
இருபது ஆண்டுகள் பேரறிஞனாகவும்
பதினைந்து ஆண்டுகள் மந்திரியாகவும்
நடமாடினான்.

'நாற்றங்கால்'
மே 74

# விஜயதசமி

ஒன்று
ஒன்று
ஒன்றாக
ஒன்பது இரவுகள்
மகிஷம் என்ற மனிதனுடன்
பொருது போராடி
வென்று

விஜயதசமியன்று
சிங்கத்தின் சிவந்த நாக்கு
சாட்சி சொல்ல
மீண்டும் யுத்தம் வரும்
வரும்
வரும்—
ஒன்று
ஒன்று
ஒன்றாக
ஒன்பது நாட்கள்
மீண்டும்
மீண்டும்
மீண்டும்
பொருது போராடி
விஜயதசமி கொண்டாடி
மகிஷம் என்ற மனிதன்
மாய மறுத்து
மீண்டும் உயிர் பெற்றெழ

வரும்
வரும்
என்று
கனன்று அலுப்புற்று
இந்த விஜயதசமி அன்று
மகிஷம் என்கிற மனிதனை
மணந்து கொண்டு விட்டாள்
இனி யுத்தம்
ஒன்பது நாட்களுக்கு
மட்டுமல்ல.

'நாற்றங்கால்'
மே 74

# என்ன செய்ய?

1

எங்கேயோ தொலைதூரத்தில்
கண்ணுக்கெட்டாத தொலைவில் ஒரு நாய்
குலைக்கிறது. அது என்ன மாதிரி நாய்
என்று எனக்குத் தெரியாது. கறுப்பா
பழுப்பா, வெள்ளையா; சடைநாயா
தெருநாயா, ஜாதிநாயா, வளர்ப்பு நாயா
என்று அதன் குரலிலிருந்து என்னால்
அனுமானிக்க முடியாது. நாய் குலைக்கிறது.

எங்கேயோ, எவன் உள்ளத்திலோ
எழுந்த ஒரு சிந்தனை எப்படியோ
என்னை எட்டி என்னைப் பாதிக்கிறது.
அவன் எப்படி, என்ன என்று எனக்குத்
தெரியாது. கறுப்பனா, சிவப்பனா, வெளுப்பனா

என்னைப் போன்ற ஒருவனா
என்றும் எனக்குத் தெரியாது.
அவன் வலமானவனா, இடமானவனா
நடுவனா, பேராசிரியனா, கதாநாயகனா
என்று எனக்குத் தெரியாது.

உலகத்தின் குரல்கள் என்னை
எட்டுகின்றன, தொடுகின்றன, தவிக்க
விடுகின்றன

உலகத்தின் சிந்தனைகள்
என்னைப் பாதிக்கின்றன.
நடந்ததும் நடக்காததும்
நினைத்ததும் செய்யாததும்
என்னை எப்படியோ பாதிக்கின்றன

ஏன் என்று என்னைக் கேட்டும்
பயனில்லை. எனக்கே தெரியாது.
என்னைக் கேட்டுப் பயனில்லை

ஆழ்ந்த உறக்கம் கெட்டு
நள்ளிரவில் காதில் விழுந்த
நாயின் குலைப்பைக் கருத்தில் வாங்கி
ஏன் என்ன ஏது என்று
அவஸ்தைப் படுகிறேன்.
இதுவா என் சுதந்தரம் ?
இதுவா என் ஆஸ்தி ? இதுவா என் நிலைமை ?

எனக்குத் தெரியவில்லை.
தெரியவில்லை என்றும் ஏற்றுக் கொள்கிறேன்
ஆனாலும் தெரியாதிருப்பது போதாது
குற்றம் எதுவும் புரியாதவனும்
குற்றவாளிதான் என்கிறார்கள்.
மனிதனாகப் பிறந்ததே குற்றம் தானோ ?
நாயாய்ப் பிறந்திருந்தால் குலைத்திருக்கலாம்
ஆடாய்ப் பிறந்திருந்தால்
கடித்துத் தின்றிருப்பார்கள்

பேயாய்ப் பிறந்திருந்தால் யாரையாவது
பிடித்துக் கொண்டிருக்கலாம்.
சேயாய்ப் பிறக்குமுன் தாயின்
கர்ப்பத்தில் சௌக்கியமாய் இருந்திருக்கலாம்
பிறந்து விட்டால் நானும் ஒரு புள்ளி
ஆகி விடுகிறேன். எத்தனை புள்ளி
சேர்ந்தால் ஒரு கோடாகும் என்று
எந்த யூக்ளிட் சொல்லப் போகிறானோ
தெரியாது.

தெரிந்து கொள்ள முயன்றாலும்
தப்பு. தெரியாமலே இருந்து விட்டாலும்

தப்பு. தெரிந்தவர்களை அண்டினாலும்
தப்பு. தெரிந்தவர்களை நினைத்தாலும்
தப்பு. ஆ. ஹிட்லரை மட்டும்
கொடுங்கோலன் என்கிறார்கள்.
நாயேனை என்று பாடிய மாணிக்க
வாசகனைப் பக்தன் என்கிறார்கள்.
என்ன செய்ய? நாயாய் ஓடுகிறேன்

நடுவீதியிலே, நாயாய்க் குலைக்கிறேன்.
நடுவீதியிலே, நாயாய் அலைகிறேன்
பிழைப்பு எனும் எச்சிற்கலை தேடி
நான் கறுப்பா, சிவப்பா, தெருநாயா,
பணக்காரவீட்டு நாயா என்று
வலதா, இடதா, நடுவா என்று
உங்களில் யாருக்காவது தெரியுமானால்
சொல்லுங்களேன். சொல்லிக்
குலையுங்களேன். நள்ளிரவில்
ஆழ்ந்த தூக்கத்திலிருந்து விழித்து
கவனித்துக் கேட்டுப் பார்க்கிறேன்.

2

தெருக்களிலே நடக்கும்போது
எதிர்படுகிற மனிதர்களின் முகங்களை
கவனித்துப் பார்க்கிறேன். எல்லோருக்கும்
அநேகமாக எல்லோருக்குமே
ரெண்டு கண்கள் ரெண்டு காதுகள்
ரெண்டு கால்கள் முதலியன இருக்கின்றன.

எனினும் அவர்களில் ஒருவரும்
என்னைப்போல இல்லை.
ஒருவரும் உலகத்தின் சுமையெல்லாம்

முதுகிலே, மனத்திலே சுமப்பதாகத்
தெரியவில்லை
என் சுமை கனப்பானேன்? அவர்கள்
சுமை கண்ணில் படாமல் இருப்பானேன்?

முதுகிலே அழுக்கு மூட்டை
சுமந்த குள்ளச்சாமி
நீ உள்ளே சுமக்கிறாய்
நான் முதுகிலே சுமக்கிறேன்
என்று சொன்னதாக பாரதி
க(வி)தைக்கிறான். எது அழுக்கு
எது சுத்தம் என்று குள்ளச்
சாமிக்குத் தெரியுமா என்று
எனக்கு ஒரு சந்தேகம்
வண்ணான் வெளுத்ததெல்லாம்

வெள்ளையா ? புண்ணிய மூட்டை
சுமப்பவனும் சுமப்பவன்தானே !
பணமூட்டை சுமப்பவனும்
சுமப்பவன்தானே? ஏழ்மை
மூட்டையும் மூட்டைதானே?
அறிவுச் சுமையும் சுமைதான்
அவலச் சுமையும் சுமைதான்

சுமைதாங்கும் அவ்வளவு பேரும்
தெருவில் எதிர்ப்படுகிற அத்தனை பேரும்
கண்களில் அமைதியுடன்
எப்படி நாட்களைக் கழிக்கிறார்கள் ?
நான் மட்டும் ஏன்
கண்ணீரைக் கணக்கிடுகிறேன் ?
எனக்கே தெரியவில்லை என்ன செய்ய ?

3

கோயில் கோயிலாகப் புகுந்து தேடி
புஸ்தகம் புஸ்தகமாகப் படித்துத் தேடி
எதிர்ப்பட்டவர்களிடம் எல்லாம் கேட்டுத்
தேடிக் கண்டதென்ன ?
ரெயிலில் கூட வந்த ஜோடி
காசிக்குப் போவதாகத் தெரிவித்த போது
''என்னவேலை?'' என்று விசாரிக்க
புருஷன் தயங்க, மனைவி
''சுகஜீவனம் தான்''
என்று சர்வ நிச்சயமாகச் சொன்னது
நினைவுக்கு வருகிறது.
உலகில் பிறந்தவர், இறந்தவர்
இறக்கப் போகிறவர் எல்லாம்
சுகஜீவனம் தான், வேறு என்ன ?

பிறந்து குவா என்று அழுதது முதல்
மூச்சடங்கிப் பேர் நீங்கிப்
பிணமாகிப் போகும் வரை
வாழ்ந்ததெல்லாம்
ஜீவனம்தான். ஆனால்
சுகம் என்பது என்ன ?

புழுக்கமான பொழுதிலே மழைத்துளி
விழுவதா ? கையில் உள்ள சொறி சிறங்கைச்
சொறிந்து அறிவதா ? குருபிக்குரல் கேட்டு
கவிதை எழுதுவதா ? வெண்ணை முகர்ந்து
துளி இன்பம் அடைவதா ? எம் ஜி யார்
சினிமா பார்ப்பதா ? பரமேசுவர ஐயர்

ஹோட்டலில் அன்று சாப்பிட்டதை
நினைத்து சுவைப்பதா? புகைப்பிடிப்பதா?
தாகம் தீரத் தண்ணி போடுவதா?

என்று மகிழ்வதா? பிறருக்குதவினேன்
என்று பெருமைப் படுவதா? பிறப்பிடம்
பார்த்தேன் என்று மகிழ்வதா? எது?

சுகஜீவனம் எது என்று தேடுவது?
நாயாய்க் குலைப்பதா, நரியாய்ப்
பதுங்குவதா, பறவையாய்த் திரிவதா,
கழுகாய் வியர்ப்பதா? மனிதனாய்ப்
பேராசைப்படுவதா? ஒட்டைச் சிவிங்கியாய்
உயர்வதா? யானையாய்ப் பெருப்பதா?
எருமையாய்க் குட்டையில் விழுந்து
கிடப்பதா? பெயர் எடுப்பதா?
புகழ் அடைவதா, பணம் சேர்ப்பதா
கீதம் பாடுவதா? எது எது எது

தெரியாதவன் என்ன செய்ய?
தெரிந்தவன் தான் என்ன செய்ய?
எப்படிச் செய்ய?

4

தத்துவதரிசிகள் ஆயிரம் பேர்
கண்டு சொல்லி விட்டார்.
பொருளாதார மேதைகள் ஒரு கோடி
விண்டு சொல்லி விட்டார்
அரசியல்வாதிகள் ஒரு பத்தாயிரம் பேர்
இருந்து கண்டு விட்டார்.
கவிகள் ஒரு ஆயிரம், நாடகாசிரியர்
ஒரு ஆயிரம், கட்டுரையாளர் ஒரு ஆயிரம்
பிட்டுப் பிட்டு வைத்து விட்டார்.

ஆனாலும்
நாய்கள் நள்ளிரவிலே குலைக்கின்றன
மனிதன் அலைகிறான் அலைகிறான்
என்ன செய்ய என்று தெரியாமல்.

# எனக்கு ஒரு கை

என் கையைப் பிடித்துக் கொண்டு
என் பேத்தி
தாத்தா தாத்தா என்கிறாள்.
எனக்குப் பிடித்துக் கொள்ள
ஒருகை
எங்கேயும் காணோமே!

## ஏன்?

நீ பார்க்கிற அதே உலகைத்தான்
நானும் பார்க்கிறேன்.
உன் பார்வை மட்டும்
வேறாக இருக்கிறதே
ஏன்?

## சாவு - 1

சாவதென்பது அப்படி ஒன்றும்
சுலபமான காரியம் அல்ல.
உலகத்தில் உயிர் வாழ்பவர்கள் எல்லோரும்
சாகத்தான் போகிறார்கள்
ஆனாலும்
சாவதென்பது அப்படி ஒன்றும்
சுலபமான காரியம் அல்ல.

பௌதிகத்தில் ஒரு விதி—
இயற்கைக்கு துளியும் பிடிக்காது
என்று, அதனால் தான்
சாவதென்பது அப்படி ஒன்றும்
சுலபமான காரியமாக இல்லையோ?
இயற்கை செத்தவன் இடத்தை இட்டு நிரப்ப
வேறு ஒரு ஆளைத் தேடுகிறது.

# சாவு - 2

இருப்பவர்களை அந்தந்த தேசத்து சர்க்கார்
கணக்கெடுக்கிறது. இறந்தவர்களைக்
கணக்கெடுப்பதில்லை. ஏனோ தெரியவில்லை.
இத்தனை பேர் செத்திருப்பார்கள் என்று
நான் எண்ணவில்லை என்று ஒரு கவி
எழுதினான். செத்தவர் உலகில் ஜனத்தொகை
பெருகிவிட்டால் என்ன செய்வார்கள்
என்று எனக்குத் தெரியவில்லை.
குடும்பக் கட்டுப்பாடு செய்வார்களோ?
அதற்கு ஒரு இலாகா, மந்திரி,
பிரசாரகர் எல்லாம் தேவைப்படுமே
இத்தனைபேர் செத்துத் தொலைந்தால்
அந்த உலகில் இடங்காணாதே
என்கிற தர்ம சிந்தனை மனிதனுக்கு
வேண்டாமோ?

## காசியும் பம்பாயும்

காசியிலும்
கூலிக்கு இன்பம்
தரும் பெண்கள்
உண்டு உண்டு.

பம்பாயிலும்
கூலிக்கு இன்பம்
தராத பெண்கள்
உண்டு உண்டு.

# அகராதி

நான் சொல்லக் கூடிய
வார்த்தைகள் எல்லாம்
இதோ இந்த அகராதியில்
அடங்கியுள்ளன.
இந்த அகராதியை எடுத்து
உங்கள் மேல் வீசி எறிந்தால்
என்னை ஒரு கவி என்று
ஏற்றுக் கொள்வீர்களா?

நான் செய்யக் கூடிய காரியங்கள்
எல்லாமே இந்தப்பத்து
விரல்களில் அடக்கம்.

என் விரல்களைக் கண்டு
நான் காரியவாதி என்று
கண்டு கொள்வீர்களா?

# அலிகள்

டெல்லியில் யார் வீட்டில்
குழந்தை பிறந்தாலும்
ஒரு பத்து அலிகள்
வந்து குதித்துப் பாடி விட்டுக்
காசு கேட்பார்கள்.
நல்ல பழக்கம்—இந்த
வடநாட்டுப் பண்பாடு
எனக்குப் பிடித்திருக்கிறது.
பிள்ளை உற்பத்தி செய்ய
முடியாதவர்கள் பிள்ளை
பிறந்தது கேட்டுக் குதூகலிப்பது
நல்ல பழக்கம் என்றுதான்
எனக்குத் தோன்றுகிறது
வடநாட்டு அலிகள் பற்றியும்
அவர்களுடைய பொய் முலைகளைப் பற்றியும்
எழுதிய கவிஞர் இளங்கோ அடிகள்
அவர்களுடைய இந்தப் பழக்கம் பற்றி
எழுதவில்லையே என்று
எனக்கு வருத்தம்தான்.
ஆனாலும் உலகமே அலிகளாகி விட்டால்
யார் வீட்டில் குழந்தை பிறக்கும்
யார் வீட்டில் அவர்கள்
குதித்துப் பாடிக் காசு
கேட்பார்கள் என்று
நான் யோசித்துப் பார்க்கிறேன்.
எனக்கு விடை கிடைக்கவில்லை.

# கீதோபதேசம்

கண்ணன் சொன்னான் :

நம்பாதே எதையும்
எதிர்பார்க்காதே!
எதிர்பார்க்காதவன்
ஏமாறமாட்டான்

முடிவுகள் முக்கியமல்ல
உன் செயலே முடிவு

செய்து
அச் செயலின் முடிவு
சில்லறையானதோர் வடிவமாகக்
காணும்போது ஏற்படும்
ஏமாற்றம்
சாவேயாகும்

சந்திக்காதிருப்பதும் நல்லது
சிந்தனையற்ற செய்கை
என்மேல் ஏற்றி வைத்த
செய்கை
தாயின் கர்ப்பப்பையிலே
சிசு உறங்கிக்
கிடப்பது போல
உன்னைக் கிடக்கச் செய்யும்

செய்கை
மேலே இன்னதென்று
நானே

○ 92

நானே
அறியாதபோது
ருத்திரனை அழைக்கிறேன்

ருத்திரன்
என் நண்பன்

என் நண்பனுக்குச்
செய்வதின்னது
என்று தெரியும்.

ஆனால்
உலகத்தின் முடிவும்
முக்கியமான விஷயம் அல்ல.

ருத்திரனுக்குத் தெரியும்
உலகத்தின் முடிவும்
சில்லறையானதோர் விஷயம்தான்
என்று.

சில்லறைகள்
எத்தனை சேர்ந்தாலும்
ஒரு கோடி
யாகாது.

# கவிதை

பிறந்தது
ஒரு கவிதை
சொற்கள்
தாம் தீமென
வந்து குதித்தன—
கூரற்ற சொற்கள்
தேய்ந்த சொற்கள்
பல்லாண்டாக
உயிரற்றுப் போன
சொற்கள்
செலாவணியற்ற
சொற்கள்
பிறந்தது
ஒரு கவிதை
தேய்ந்து
மழுங்கிய
உருவகங்கள்
உருவற்ற
பிண்டங்கள்
உன்னையும் என்னையுமே
எட்டாத
ஒலிகள்
பிறந்தது
ஒரு கவிதை
எத்தனை சிந்தனை
எத்தனை தடம் தேய்ந்த
பித்தனை ஏமாற்றும்
வித்தைகளின்
முடிவு

பிறந்தது
ஒரு கவிதை
பிறப்பிலே
உயிரற்று
ஓங்கி அழச்
சக்தியற்று
அலைகள் எழுப்பாத
கல்லாக
தண்ணியற்ற
தடாகத்துத் தாமரையாக
பிறந்தது
ஒரு கவிதை

கவிதையா
அது

கவிதை வேண்டுமானால்
சொற்களைக் கூராக்கு
இசையை ஒதுக்கிவிடு
உருவகங்களை உயிராக்கு
சிந்தனைகளை நேராக்கு

உபயோகமற்ற
பாத்திரங்களை
ஏற்றிவைக்கும்
மச்சிருட்டாக
கவிதையை நினைக்காதே.

## முச்சங்கம்

சென்னைத் தார் ரோட்டிலே
புல் மேயும்
ஜட்கா வண்டிக் குதிரையது—

மங்கோலியப் புல் வெளியிலே
பல்லாயிரம்
பரிகள் புடை சூழ
பவனி வந்த
தொல்காப்பியம் பேசும்

அரபுப் பாலைவனத்திலே
மனிதன் கைபடாது
நிமிர்ந்து
திரிந்து வந்த
பெரியபுராணம் சொல்லும்.

தார்த்தாரிய மக்களின்
செல்வமாக
பெண்ணுக்கும் மகனுக்கும் மேல்
அருமையாக
வளர்ந்து வந்த
திருக்குறள் ஓதும்.

சென்னைத் தார் ரோட்டிலே
புல் மேயும்
ஜட்கா வண்டிக் குதிரையது.

எல்லையற்ற பெருமைப் பேச்சுக்கும்
பல்லிளிக்கும் சிறுமைக்கும்
இடமாகி விட்ட
தமிழ்ப் பிரபாவம்
காண்மினோ காண்மினோ !

# சேவல் வால்*

அரசமரம் சுற்றி வந்து
அடிவயிற்றைத் தொட்டுப் பார்க்கும்
பாவனையாய்

கண்களை மூடிக் கொண்டு
அஸ்தமித்து விட்டது என்றெண்ணும்
போக்காய்

நூல்களிரண்டைப் படித்து முடித்துவிட்டு
அறிவெல்லாம் பெற்று விட்ட
கற்பனையாய்

கையில் ''சேவல் வால்'' கிளுகிளுக்க
செவிவழி ஞானமெல்லாம் கிட்டிவிட்ட
வேகத்துடன்

''அறிவாளி நான்'' என்று பேசும்
அறிவாளியை டெல்லிமா நகரிலே
காணலாம்—காண்.

*Cocktail

# நினைவுப்பாதை

1

இரவு சாப்பிட உட்கார்ந்ததும்
பாட்டி சாதம் போட்டு சாம்பார்
வார்த்ததும்
பக்கத்தறையில் உரக்க
முனகல் கேட்டு
எழுந்து போய்ப் பார்க்க
செத்துக்கிடந்த தாய்
உருவம் அடியோடு மறந்து விட்டது
ஆனால்
'தாயை இழந்தவன்
அழ வேண்டிய
மாதிரியா நீ அழுதாய்?
என்று
மறுநாள்
பாட்டி
கேட்டது மட்டும்
பசுமையாய் நினைவில்
பதிந்திருக்கிறது.

2

தகப்பன் இறந்தபோது
சாகவயது வந்துவிட்டது.
கருமத்தில் கண்ணாக
இருந்தது கண்டு புரோகிதர்
'என்ன சிரத்தை! என்ன சிரத்தை!'
என்று வைதிகமாய்ப் பாராட்டியது
நினைவில் இருக்கிறது.

குப்பையைக் கூட்டி
அப்புறப்படுத்த
உயிரற்ற உடலை
எடுத்தெரிக்க
எத்தனை சடங்குகள்
எத்தனை புராணச் சப்பைக் கட்டுகள்
என்று நினைத்ததும்
நினைவில் இருக்கிறது.

3

'பிள்ளையில்லை
புத்தென்ற நரகத்தில்
பொத்தென்று விழுவான்
இவன்'
என்று
வாழ்வே மாயம்
என்று
சொன்னவர்கள்
சொல்வது
நினைவுக்கு வர
புத்தென்ற நரகம்
மெய்யோ பொய்யோ
என்று காணும்
நினைவு பெற்று
இருக்கின்றேன்—
தெரிந்து சொல்வேன்.

## சிதம்பரத்தில்

உலகம் உய்ய
அறிஞர்கள் ஞானம் பெற
ஓயாத நடனம் ஆடி
இன்று ஓய்ந்து விட்டான்
நடனராஜன்.
இப்போது அவன்
ஆடுவது
குண்டுக் கொசு விரட்ட—
கைமறித்துக் கால் தூக்கி
ஆடுகின்றான்.

பக்கத்தில்
மீளாத தூக்கத்தில் ஆழ்ந்துறங்கும்
கோவிந்த ராஜனையோ
எந்தப்பட்டணத்து
எத்தனை கொசு கடித்தாலும்
எழுப்ப இயலாது.

ராஜாக்களின் காலம்
ஒடுங்கி விட்டதில்
ஆச்சரியம் எதுவுமில்லை.

## பாஸ்கரனுக்கு

கலகலென, ஜிலுஜிலென
வார்த்தைகளை உதிர்த்துச்
சிந்தனைகளைத் தொட்டு எழுப்பிய
அவர் வாய் மூடிவிட்டார்.

விந்தைப் பேச்சை
விடியும் வரை பேசும்
அவர் தொண்டை
வற்றிவிட்டது.
உதடுகள் அசைய மறுக்கின்றன.
கலையுள்ளம் சொட்டும் வார்த்தைகள்
தொனிக்க மறுக்கின்றன.

கேட்கக் கேட்கத் திகட்டாத
கிளைகிளையாக ஞானக்கிளைகள் துளிர்த்த
புல்லிதழிலிருந்து புல்லிதழுக்குத் தாவும்
சிந்தனை வெட்டுக்கிளி
ஓய்ந்துவிட்டது.

கோத்தவார்த்தைகள்
கவிதையென
அழகென
ஓங்கு சிந்தனைகளென
எடுத்து வீசிய
அவர் மனம் உறங்கிவிட்டது.

சென்னைக்கு இனி சென்றால்
பேச்சின்பத்துக்கு
யாரை நாடிப் போவது?

# எங்கே? எங்கே?

நாதனுள்ளிருப்பதாக எண்ணி
ஏமாந்துவிட்டோம்.
பற்றெலாம் அறுத்தான் நம்
பற்றறுப்பான் என்று நினைத்து
மோசம் போனோம்.
பற்றெலாம் அறுத்துவிட்டு
பற்றுத் தம்மேல் கொள்ளச் சொல்லும்
நாரணனும் இரணியனும்
ஒன்றுதான் கண்டோம்.
மார்க்ஸும் மனுவும்
கண்டு சொன்னதும்
குருட்டுவழி தானோ?
புத்தனும் ஏசுவும் வாக்களித்த
லக்ஷ்யமும் எங்கே, எங்கே?

# அதிசயங்கள்

எத்தனை அதிசயங்கள்
எத்தனை எத்தனையோ!

தாகமெடுக்கிறது
தண்ணீர் குடிக்கிறேன்
திருப்தி ஏற்படுகிறது
இது அதிசயமில்லாமல் வேறு என்ன ?

மெல்லிய நாதஸ்வரம்
காற்றிலே மிதந்து வருகிறது.
கேட்டபடியே சிந்தனை எதுவுமில்லாமல்
இரண்டு நிமிஷங்கள் கழிக்கிறேன்
இதுவும் அதிசயமே.

பக்கத்து வீட்டில் ஏதோ
அல்ப சந்தோஷம்
பேரக்குழந்தை பிறந்ததோ
லாட்டரியில் பரிசு விழுந்ததோ
மூத்தமகனுக்கு வேலைதான் கிடைத்ததோ
எனக்கு எதுவும் நிச்சயமாகத் தெரியாது
ஆனால் அந்த ஆனந்தம்
என் கண்களைக் குளமாக
நிரப்புவதும் அதிசயம்தான்.

காலையிலும் மாலையிலும்
தில்லைத் திருச்சபையிலே
நடனமிடும் ராஜனைக் காணச்
சென்று வருகிறேன் — பக்தி
ஏதுமில்லாமலே — ஆனால்
அதிலே எத்தனை தொல்லைகள்
எப்படியோ மறைகின்றன.

○ 104

எங்கோ எவனோ
தன்னைத்துப்பாக்கி எடுத்துச் சுட்டவனை
'ராம ராம — மன்னித்து விடு'
என்று சொல்லி விட்டுச் சாகிறான்.
உலகம் அவனை மன்னிப்பதில்லைதான்
என்றாலும் அந்த வார்த்தைகளாலே
உலகமே உயர்ந்தமாதிரித் தோன்றுவதும்
அதிசயம் தானே !

என்ன புழுக்கம்
என்று சொல்லிக் கொண்டிருக்கும் போதே
இரண்டு தூற்றல் போட்டு
உடலையும் உள்ளத்தையும்
குளிர்விக்கிறது
— அதுவும் அதிசயம் தானே !

எத்தனை அதிசயங்கள்
எத்தனை எத்தனையோ

## புதிர்

புரிந்தது பாதி
அதில் தெளிந்தது காலே அரைக்கால்
வார்த்தைகளில் வடித்தது கால்
அதில் புரிய வைத்தது அரைக்கால்

இதுவே போதும்
புதிரை வெடித்து விட்டேன்
என்று மார் தட்டிக்
காலங் கழிக்கும்
கவிகள் குலம்
நான்.

# குருவும் சிஷ்யனும்

கைநீட்டித் தலையில் வைத்து
உபதேசம் செய்து முடித்த
குருவை வணங்கி
இடத்தமர்ந்த சிஷ்யனை

'விளங்கிற்றா?'
என்று குரு வினவ

'விளங்கிற்று'
என்று சிஷ்யன் கூற

'என்ன விளங்கிற்று
எனக்கும் சொல்'
என்று சகபாடி கேட்டான்

'குருவே சொல்வார்'
என்று பதில் வந்தது

# திரியும் கோணங்கள்

தப்ப முடியாது
தப்பினாலும்
தவறு என்று
சொல்ல முடியாது.

வேகங்கள் கெடுத்து
அழைப்பவனுக்கும்
வேகங்கள் பல உண்டு
உண்டு உண்டு.

வக்ரங்கள் பலவும் சேர்ந்தே
மனிதன் ஒன்று
ஆகின்றன.

காலிரண்டு
ரெண்டு வழி போகாது

கண்ணிரண்டு
ரெண்டு வழி நோக்காது

வாய் ஒன்று
உதடிரண்டு
பலவும் பேசும்

காதிரண்டு
பலவும் கேட்கும்

எத்தனை விதமான கோணங்கள்
கோணத்திற்கு
ஒரு வேகம்

திரியும் கோணங்கள்

# தேவடியாள்

திருவாரூர்க் கமலம் அவள்
காயமெனும் மருந்து கொண்டு
ரஸவாதம் புரிகின்றாள்.

மாக்ஸ் ஃபாக்டர் தேவையில்லை
மனமே அவளைக் கன்னியாக என்றும் காண
உதவி புரிகின்றது.

நித்தியமான கன்னியவள்
ஆசை அடங்க அடங்க
ஓயாது ஆசை ஊட்டுபவள்.

வேறு எவளிடமும் இல்லாத
சரக்கு அவளிடம் ஒன்றுமில்லை.
இல்லை என்று காண இயலாது.

திருவாரூர்க் கமலம் அவள்
ரஸவாதம் புரிகின்றாள்.

# ஏன்?

இங்கே எப்போதோ
ஒரு தரம்
வந்து இருந்திருக்கிறேன் —
இன்றும் இங்கேயே
இருப்பதென்னேயோ !

இதே காரியத்தை
முன் ஒரு தரம்
செய்திருக்கிறேன் —
இன்றும் இதையே
செய்வதென்னேயோ !

இதே சொற்களை இப்படியே
கூட்டிச் சொல்லிக்
குவித்திருக்கிறேன் —
மீண்டும் இன்று
குவிப்பதென்னேயோ !

# செயப்படு பொருள்

ஆதிசேஷன் அன்று
தோள் மாற்றினான்
பள்ளிச்சிறுவர்கள்
பயந்து
தங்கள் உபாத்தியாயரைச் சூழ்ந்து
ஒதுங்கி நின்றனர்
உரிச்சொல் காணும்
உபாத்தியாயர்
ஆதிசேஷனை அடக்கி ஆளுவார்
என்பது அவர்கள் நினைப்பு.
ஆண்டுவிட்டார் என்று
அவர்கள் கண்டனர் —
இடம் பெயராது
பையன்களை அவர்
அணைத்து நின்றார்.

மற்றொரு நாள்
பள்ளிக் கடுத்த
குடிசை வரிசையிலே
தீப்பற்றிக் கொண்டது.
இது வேறு ஒரு ஆதிசேஷன் —
தீக்கரங்கள் மூலைகளில்
வளைந்து உயர்ந்தன.
பையன்களை வரிசைப்படுத்தி
கிணற்றில் நீர் எடுத்து
பக்கெட்டு பக்கெட்டாகக் கொட்டி
தீப்படை வருமுன்
அணைத்து விட்டார்

பலநாள்
முகத்தில் கரி வழிய
மூக்கில் தீப்பட்டபுண்
வடுக்காட்ட
பையன்கள் அதுபற்றியே
பேசிக் கொண்டிருந்தனர்.

இன்று உபத்தியாயர்
வகுப்பில் வினைச் சொல்லும்
செயப்படு பொருளும் பேசும்போது
பையன்கள் ஜன்னல் வழியாக
வெளியே பார்வையை வீசிக்
காத்திருக்கின்றனர் —
வீடுபற்றி எரியாதா
வெள்ளம் வராதா
ஆதிசேஷன் மீண்டும்
தோள்மாற்ற மாட்டானா
என்று.

# இனம்

ஊருக்கு உழைத்தவன்
    ஆண்டியானான்;
பாருக்காகப் பாடுபட்டவன்
    போண்டியானான்;
அவனை ஏவி வேலை வாங்கியவன்
    மந்திரியானான்.

# தகுதி

ஜமுக்காளம் விரிப்பான்;
வெற்றிலை பாக்கு கூஜாத் தண்ணீர்
எடுத்து வைப்பான்; தூசி தட்டிப்
புஸ்தகங்கள் அடுக்கி வைப்பான்
'யாரடா பையன்' என்றால்
வந்து நிற்பான்
புலியென்றால் பால் கொணர்வான்
நிமிர்ந்து பதில் சொல்லான்.
'உத்தரவு' என்று ஒருவார்த்தை மட்டுமே
அவன் அறிந்திருந்தான்.

அவன் இன்று மேடையேறிப்
பேசுவது கேட்டேன்
அடாடா! எப்படி மாறிவிட்டான்.
ஊரிலே தலைவன் என்று
அவனுக்கொரு கோஷ்டி
முனிசிபாலிடி அங்கத்தினன்.
அதற்கும் இதற்கும் செயலாளன்
நான்கு விஷயங்களையும்
நன்கு அறிந்தவன்
என்று அவனை இன்று புகழ்கிறார்கள்

'இதிலே என் பங்கு எத்தனை?'
என்று ஹாஸ்யமாகக் கேட்டேன்
'எல்லாமே உங்களதுதான்'
என்று நயமாக உரைத்தான்

○ 114

நானும் தலைவனாகத்
தகுதியுள்ளவன் தானோ
என்று எனக்கே
சந்தேகம் தட்டியது.

# கிளி

(ந. பிச்சமூர்த்திக்கு)

மண்ணில் கிளிக் கூண்டு
பண்ணி வைத்தேன்,
சிவப்பு மூக்குப்
பச்சைக் கிளியை
'வா வா' என்றழைத்தேன்
அது வரவில்லை.

எனக்கு 'வவ்வே'
காட்டிவிட்டு
அதுதன் பாட்டில்
ஏதோ சொல்லிக் கொண்டே
பறந்து சென்றது

வானத்துப் பறவை
மண்கூண்டில்
அடைபடுமா?
ஏன் எனக்கு
இது தெரியாமல் போச்சு
என்று சிந்திக்கிறேன்.

## சேவல் வால்*2

காலையில் அப்போதெல்லாம்
சேவல் கூவும்
இப்போது மாலையில்
சேவல்வால்
கூப்பிடுகிறது—

இது டெல்லி மாநகரம்

* Cocktail

# பூனைக்குட்டிகள்

மேஜை மேல் படுத்துறங்கும்
கருப்புக் குட்டி
என்னைப் பேனா
எடுக்க விடாமல்
தடுக்கிறது.

நாற்காலியில்
படுத்துறங்கும்
கபில நிறக்குட்டி
என்னை உட்கார
அனுமதிக்க
மறுக்கிறது.
அடுப்பிலே
பூனைக்குட்டி
உறங்குகிறது
சமையல்
இன்று நேரமாகும்
என்கிறாள்
என் மனைவி.

ஐந்து பூனைக்குட்டிகளே
அதிகம் என்று
எண்ணும் எனக்கு
பாற்கடலில்,
வைகுண்டத்தில்,
எத்தனை பூனைக்குட்டிகள்
இருக்கும் என்று
கணக் கெடுக்கத் தோன்றுகிறது.

'கசட தபற'
ஏப்ரல், 72.

# கடிதம்

அணிலாடு முன்றிலில்
அசையாது நீ உட்கார்ந்திருந்தாய்
பட்டப் பகலிலும்
பக்கத்தில் யாரும் எதுவும்
இல்லாத நிலையிலும்
உன்னைக் கண்டு கொள்வதே
எனக்கு எளிதாக இருக்கவில்லை.

சிட்டொன்று சிவ்வென்று
பறந்துவந்து உன் தலையில்
உட்காரும் தறுவாயில்
பீதியடைந்து
பறந்து திரும்பியது பார்த்து
உன்னை அடையாளம்
கண்டு கொண்டேன்.

பார்த்துக் கொண்டே
பலயுகங்கள் நின்றேன்.
அணில்களை விரட்டவோ
உன் சிந்தனைகளைக் கலைக்கவோ
மனசில்லாமல்
திரும்பி விட்டேன்.

வேகம் இது. எப்படி வந்தது என்பது தான் கலை ரகசியம். எப்படியோ வந்தது—பாரதியார் உயர்ந்த கவியானார். இப்படித் தோன்றிய வேகத்தால் தான் கம்பனும், இளங்கோவடிகளும், காரைக்காலம்மையாரும், ஆண்டாளும், மாணிக்கவாசகரும், பட்டினத்தடிகளும், ஜெயங்கொண்டாரும், கோபால கிருஷ்ண பாரதியாரும், தாயுமானவரும் அவரவர் அளவில் உயர் கவிகள் ஆகிறார்கள். இந்தக் கவிதை உண்மையை அலசிப் பிய்த்து எடுத்துப் பார்க்க முடியாது — ஆனால் சூக்ஷ்மமாக இது இருப்பது என்பது நிதரிசனமாகவே தெரிகிறது. உயர் கவிதையின் உயிர் இது.

இந்தக் கவிதை உண்மைக்கு, இன்றைய வாரிசாக, புதுக் கவியும் புதுக் கவிதையும் தோன்ற வேண்டும். பாரதியார் காலத்தில் பொது வாழ்க்கை சிக்கலானதாகி விட்டது என்று சொன்னால் சுலபமாக ஏற்றுக் கொண்டு விடலாம் போலத் தோன்றும். பாரதியார் மக்களிடையே பொதுவாகவும் தனித்தனியாகவும் கண்ட குறைகளுக்கு எல்லாம் சுதந்திரமின்மையே காரணம் என்று நம்பினார். சுதந்திரம் வந்துவிட்டால் அக்குறைகள் தானாகவே நீங்கிவிடும் என்றும் நம்பினார். சுதந்திரம் வந்து விட்டது. ஆனால் தனி மனிதர்களின் குறைகள் பன்மடங்காக அதிகரித்து விட்டது போல் இருக்கிறது. பொது வாழ்வு, சமுதாயம் பற்றியோ கேட்கவே வேண்டாம். பொருளாதார, சமூக, அரசியல் துறைகளில் மட்டுமல்ல; நல்லது தீயது அடிப்படையிலும், ஆன்மீகப் பாமார்த்திகத் துறைகளிலும், போலிகளும் மோசடிகளும் மலிந்து விட்டன. குறைகள் நிறைந்து நிற்கின்றன.

கவிதை மனிதனின் குறைகளைப் பற்றி மட்டும் தான் சொல்ல வேண்டுமா என்று கேட்கலாம்.

குறையைச் சொல்வதும் நிறையைச் சொல்வதும் ஒன்றுதான். ஒன்றைச் சொல்லி ஒன்றை விட முடியாது. இலக்கியத் துறைகள் எல்லாமே சமுதாயம், தனி மனிதன் என்கிற இரண்டு பிரிவிலும் குறைகளையும் நிறைகளையும் சொல்லியும் சொல்லாமலும் அறிவுறுத்துகின்றன என்பது தப்ப முடியாத நியதி.

இந்தக் காலத்துக்கான கவிதை உண்மையை இந்தக் காலத்துக்கேற்ற சிக்கலான வார்த்தைச் சேர்க்கைகளில், நிரந்தரமாக்குவதற்கு, அழியாத இலக்கிய உண்மையாக்குவதற்கு, புதுக்கவிதை தேவை. அப்போது தான் சங்க காலத்தின் சிறந்த கவிதைச் சிருஷ்டிகளையும், சிலப்பதிகாரம், கம்ப ராமாயணம் போன்ற நூல்களின் தனித்தன்மையையும் நாமும் இன்று எட்ட முடியும். (இலக்கிய ரீதியாகத்தான் சொல்லுகிறேன்) இன்றும் ஒரு புதுச் சிலப்பதிகாரமும், ஒரு கம்ப ராமாயணமும் தோன்ற முடியும். (அது களிதை ரூபத்தில் இருக்கக் கூடாது என்று விதி ஒன்றும் கிடையாது. நச்சுப் போன, நைந்து நொந்த செய்யுள் உருவத்தில் புதுக்கவிதை இருக்க முடியாது என்பது தெளிவு. இது சாத்தியமாவதற்கு நம்மிடையே புதுக்கவிதைக்கானதோர் இலக்கணம் வேண்டும்.)

இலக்கியத்தில் இது கவிதை யுகம் அல்ல—கவிதை யுகம் கடந்து விட்டது—என்று தான் பெருவாரியான மொழிகளில் கருதப்படுகிறது. காவியங்களும் சிறுகவிதைகளும் ஒரு காலத்தில் சாதித்து வந்த கலைச் சாதனையைச் சிறுகதைகளும் நாவல்களும் வசனத்தில் சாதித்து விடமுடியும் என்று சென்ற நூற்றாண்டில் உலகமெங்கும் எல்லாச்

அநாவசியமாய் என்றோ, இனி அதற்கு ஒரு காலம் தோன்றாது என்றோ யாரும் கருதுவதில்லை. மீண்டும் இலக்கியத்தில் கவிதை யுகம் தோன்றலாம். இதற்கு ஆதாரமாக ஜெர்மன் மொழியில் ரில்கேயின் கவிதைகளும், ப்ரெஞ்சு மொழியில் பாதலெர், ரிம்போ, மல்லார்மே, வாலேரி இவர்களின் கவிதை களும், ஆங்கில மொழியில் யேட்ஸ், எலியட், டைலன் தாமஸ், எஸ்ரா பவுண்டு இவர்களின் கவிதைகளும் சுட்டிக் காட்ட உபயோகிக்கப்படும்.

தமிழைப் பற்றிய வரையில், தமிழ்க் கவிதை செத்து விட்டது என்று நிச்சயமாகவே சொல்லி விடலாம். செய்யுளியற்றுபவர்களின் எண்ணிக்கை நம்மிடம் இன்று அதிகம் என்றாலும், செய்யுள் எல்லாம் கவிதையாகி விடாது என்பதில் என்ன சந்தேகம்? யாப்பு, இலக்கணம், அணி என்றும், அசைக்க முடியாத சட்டங்கள் இட்டு, எதுகை, மோனை, சீர், தளை என்றெல்லாம் நைந்து போன செய்யுள் வார்த்தைகளுக்கு மீண்டும் மீண்டும் உயிர் தந்து, நைந்து போன சிந்தனைகளை எடுத்து எடுத்து அளித்து வந்த தமிழ்க் கவிதைக்குக் கோபால கிருஷ்ண பாரதியாரும், சுப்பிரமணிய பாரதியாரும் ஓரளவுக்குப் புத்துயிர் தந்தார்கள். கவிதையோடு இசை என்றும் உயிர் சேர்த்துக் கவிதை செய்தார்கள் அவர்கள். பக்தி விசேஷம், இசை முதலியவற்றினால் முந்திய பாரதியாரும், சமூக வெறி சுதந்திர வேகத்தினால் பிந்திய பாரதியாரும் தமிழ்க் கவிதைக்குப் புதுமை தர முயன்றார்கள். இருவருக்கும் இசை நயமும் ஓரளவுக்குத் தனிக் கவிதை நயத்தைத் தீர்த்துக் கட்ட உதவியது என்றும் அதே மூச்சில் சொல்லலாம். தமிழோடு இசை பாடுகிற மரபு இருக்கலாம். ஆனால் சங்க நூல் சிலப்பதிகார (இசையற்ற அகவல், சொல்லளவு) மரபு ஒன்றும்

தமிழுக்கு ஏற்றது என்று ஏற்றுக் கொள்ளத் தானே வேண்டும்! தமிழில் புதுக்கவிதை இலக்கணமாக இடைக்கால இலக்கண அணி மரபுகள் ஒழிந்து மிகப் பழைய மரபுகளைத் தேட வேண்டும் என்பது ஒரு விதத்தில் தெளிவாகிறது என்றே சொல்லலாம்.

தமிழை விட்டு விட்டு, வேறு மொழியில் புதுக் கவிதை செய்தவர்களின் நிலைமையைச் சற்று நோக்கினால், விஷயம் புரியும். பல ஐரோப்பிய மொழிகளில் கவிதையைச் சாக விட்டு விடுவதில்லை என்று பல புதுக் கவிகள் பிடிவாதமாகவே புதுக் கவிதை செய்து வருகிறார்கள். இந்தப் புதுக் கவிதையிலே புதுசாக இன்றைய வாழ்க்கைச் சிக்கலும், பூரணமாகப் பிரதிபலிக்கும் ஒரு வார்த்தைச் சிக்கலும், இன்றைய புதுமைகளை எல்லாம் தொட்டு நடக்கும் ஒரு நேர் நடையும், அகவல் சந்தம் என்று நாம் சொல்லக் கூடிய ஒரு பேச்சு நடை அடிப்படைச் செய்யுள் வேகமும், எல்லாவற்றிற்கும் மேலாக இடைக்காலப் பழமைக்கு மேலாக, பண்டைக்கால, ஆதிகாலப் பழமையைப் போற்றும் ஒரு திறனும் காணக் கிடக்கின்றன.

உதாரணமாகப் பார்த்தால்—டி. எஸ். எலியட் என்பவர் புதுக் கவிதை ஆங்கிலத்தில் எழுதுகிறார் என்றால், அவர் இன்றைக்குரிய ஒரு கோணத்தில், ஒரு கோணத்தில் நின்று இன்றைய வசன-கவிதை நடையை மேற்கொண்டு, அதற்கிலக்கணமாக நானூறு வருஷங்களுக்கு முன் எழுதிய ஆங்கில ஆதிகால நாடகாசிரியர்களின் அகவல் · பாணியை மேற்கொண்டு, பேச்சுச்

பழைய இலக்கண மரபை அவர் அப்படியே கொள்வதும் இல்லை. இன்றைய பேச்சு வேகத்துக்கேற்ப சொல் என்று மக்களின் வாயில் வழங்குவதின் அடிப்படையில் கவிதை செய்கிறார். அதே போல எஸ்ரா பவுண்டு என்கிற ஆங்கிலக் கவிஞர் ப்ரோவான்ஸ் கீதங்களையும், சீனத்துக் கவிகளையும், ஜப்பானிய ஹைக்குகளையும் தன்மரபாக்கிக் கொண்டு புதுக்கவிதை செய்கிறார். அவருடைய கவிதைப் பாணி இன்று ஆங்கிலத்தில் கவிதை எழுதுகிற எல்லோரையும் பாதித்திருக்கிறது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலே கவிதை செய்த வால்ட் விட்மன் வசனத்தையே கவிதையாக்கி, வசனத்தையே வரிவரியாக வெட்டிக் காட்டி, விஷய அமைதி தந்து கவியாக வெற்றி பெற்றார். இன்றைய மொழிகள் பலவற்றிலுள்ள புதுக்கவிதைக்கு, பொதலெர், ரிம்போ, மல்லார்மே முதலிய பிரெஞ்சுக் கவிகளையும், வால்ட் விட்மனையும் தான் ஆதாரமாகச் சொல்லுவார்கள். இவர்களையெல்லாம் பற்றி நான் இங்கு குறிப்பிடுகிறேனே தவிர, விவாதிக்கவில்லை. ஏனென்றால் தமிழில் புதுக்கவிதை என்கிற விஷயத்துக்கு இவர்கள் புறம்பானவர்கள். ஆனால் இவர்கள் செய்திருப்பது என்னவென்றால், அன்று ஆட்சி செலுத்திய மரபைத் தகர்த்தெறிந்து விட்டு ஒரு மிகப் பழைய கவிதை மரபை ஆதாரமாக வைத்து, இன்றைய பேச்சு வள அடிப்படையிலே புதுக்கவிதை செய்ய முயன்றிருக்கிறார்கள். அவரவர்கள் மொழியிலே அவர்களுடைய புதுக்கவிதை முயற்சிகள் வெற்றியும் பெற்றிருக்கின்றன. ஐரோப்பிய மொழிகள் பலவற்றிலே இப்போது புதுக்கவிதை திடமான ஒரு இலக்கியக் கொள்கையாகக் காட்சி தருகிறது.

தமிழில் புதுக்கவிதையின் அவசியத்தைப் பற்றிய வரையில் எனக்குச் சந்தேகமில்லை. மரபுக் கவிதை செத்து விட்டது. (அல்லது செத்துக் கொண்டிருக்கிறது. இன்று கவிகள் எழுத வருகிறவர்கள் சொல்லடுக்குப் பாடை கட்டிக் கொண்டிருக்கிறார்கள்) புதுக்கவிதை தோன்றியே தீரும். ஆனால் அது எந்த உருவம் எடுக்கும் என்று இப்போது யாரும் திட்டவட்டமாகச் சொல்ல முடியாது. ஏனென்றால் பலரும் பலவிதமான முயற்சிகள் செய்து பார்த்து வெற்றி தோல்விகள் ஓரளவுக்காவது நிர்ணயமான பின் தான் புதுக்கவிதை உருவாகி இலக்கியப் பூரணத்வம் பெற்று விமரிசனத்தைத் தாங்கள் கூறிய விஷயமாக முடியும். தேவையை உணர்ந்து பலரும் சமீப காலத்தில் இந்தப் புதுக்கவிதைச் சோதனையைச் செய்து பார்த்திருக்கிறார்கள் என்று தான் சொல்லவும் வேண்டும். அகவலுக்கே ஒரு புதுவேகம் தந்து இசைக்கவி சுப்பிரமணிய பாரதியார், வசனகவிதை என்று பெயரைக் காட்டிக் குற்றம் சாட்டி ஒதுக்கி விடச் சிலர் முயலுகிற முயற்சிகளை மேற்கொண்டு செய்து பார்த்தார் பாரதியார். கவிதை மரபை ஒடித்து வெளியேற வேண்டிய அவசியத்தை அவரும் உணர்ந்திருந்தார் என்பதற்கு அவருடைய வசன கவிதைகளே போதுமான சான்று. பாரதியாரைப் பின்பற்றி இரண்டொருவர்—முக்கியமாக, காலஞ் சென்ற கு.ப. ராஜகோபாலன் வசனகவிதை செய்து பார்த்தார்கள். புதுமைப்பித்தன் தன் கிண்டலுக்கும் கேலிக்கும் வாகனமாக, சித்தர் பாடல்களில் ஆதாரம் தேடிய ஒரு செய்யுள் உருவத்தைக் கையாண்டு பார்த்தார். எழுதியுள்ள அளவில் அவர் வெற்றி கண்டார் என்றே சொல்ல வேண்டும்.

சிறந்தது என்பது என் அபிப்ராயம். ரகுநாதன் புதுமைப் பித்தனின் முயற்சியைப் பின்பற்றி சிறிதளவு வெற்றி பெற்றிருக்கிறார். நாட்டுப் புறத் தான் மெட்டிலே நாகரிகக் கவிதை செய்யப் பார்த்த, இன்றையப் புகழேந்தி கொத்தமங்கலம் சுப்பு. இவருடைய கவிதை முயற்சிகளும் ஓரளவுக்கு வெற்றி பெற்றன. இன்னும் சிலரும் புதுக்கவிதை முயற்சிகள் செய்திருக்கலாம். அவை என் கண்ணில் பட்டதில்லை என்பது அவர்கள் குற்றமாகாது. என் படிப்புக்கெட்டிய வரையில் இவை தான் புதுக்கவிதை நோக்கி இன்று வரை செய்யப் பட்டிருக்கும் புது முயற்சிகள்.

நான் தமிழில் எழுத ஆரம்பிக்கத் தொடங்கிய நாட்களிலேயே, அதாவது இருபத்தைந்து ஆண்டு களுக்கு முன்னரே, தமிழில் புதுக்கவிதை பற்றிய சோதனைகளில் ஈடுபட்டு செய்து பார்க்க முற்பட்ட துண்டு. புதுமைப் பித்தன் நடத்திய மலர்களில் ஒன்றி ரண்டில் என் கவிதைச் சோதனைகள் வெளியாகியும் இருக்கின்றன. 'சூறாவளி'யிலும் ஏதோ கொஞ்சம் செய்து பார்த்தேன். ஆனால் தொடர்ந்து முறையாகச் செய்து பார்க்கவும் செய்து முடித்ததை வெளியிடவும் சமீப காலத்தில் 'சரஸ்வதி' மூலம் தான் முடிந்தது. 'மயன்' என்கிற புனைப்பெயரில் என் புதுக்கவிதை முயற்சிகள் சிலவற்றை வெளி யிட்டு வந்திருக்கிறேன். இந்தக் கவிதை முயற்சிக்கு இலக்கணத்தை முன் கூட்டியே தீர்மானித்து வைத்துக் கொண்டு அவ்விலக்கணத்துக்கு ஒப்ப நான் கவிதை எழுதவில்லை. என் புதுக்கவிதைக்கு

லாம். இப்போது கவிதையில் நான் செய்ய முயற்சித்ததெல்லாம் விஷயத்தையும் வார்த்தைகளையும் உள்ளத்து உண்மையிலே குழைத்து, காதும் நாக்கும் சொல்லுகிற கட்டுபாடுகளுக்கும், கண் தருகிற கட்டுபாடுகளுக்கும், உட்பட்டு எழுதுவது என்கிற காரியம் தான் இன்றைய உண்மையை நிரந்தரமாக்குகிற காரியம் தான் என் முயற்சி. இன்றைய என் அனுபவத்தை வார்த்தைகளால், பேச்சு வழக்கு வார்த்தைகளால் பேசும் சத்தத்தில் இலக்கியமாக்க, கவிதையாக்க முயலுகிறேன். பயன் கழுதையா குதிரையா, வசனமா கவிதையா, இலக்கியமா பிதற்றலா என்று சிலர் கேலி செய்பவர் இருக்கலாம். சோதனை என்று சொல்லும் போது இதற்கெல்லாம் பயப்பட்டுக் கட்டாது. இலக்கியசோதனைகள் பலவும் ஆரம்பத்தில் கேலிக்கிடமாகவேதான் காட்சியளித்தன. புதுக்கவிதை தோன்றுகிறதா என்பது தான் தீர்மானமாக வேண்டிய விஷயம் தோன்றாவிட்டால் முயற்சியையே மறந்து விடலாம். தோன்றிவிட்டால் நல்லது தான். புதுத் தமிழ் இலக்கியம் மேலும் வளம் பெறும்.

என் புதுக்கவிதை முயற்சிகள் கவிதையாகவும் இலக்கணமாகவும் உருவெடுக்க, வாசகர்கள் ரசிகர்கள் உள்ளத்தில் எதிரொலித்துப் பலன் தரப் பல காலமாகலாம் என்பதையும் அறிந்தே தான் நான் இந்தக் கவிதைச் சோதனையைச் செய்து பார்க்கிறேன். நம்முடைய இன்றைய தினசரி வாழ்விலே இடம் பெறுகிற விஷயங்கள் எல்லாமே உவமைகள், உருவகங்கள், ஏக்கங்கள், ஆசைகள், வார்த்தைகள், மௌனம் எல்லாமே என் கவிதைக்கு விஷயம். வாழ்க்கை சிக்கல் நிறைந்ததாக இருப்பது போலவே என் கவிதையும் சிக்கலும் சிடுக்கும் நிரம்பியதாக இருக்க வேண்டும் என்பதே என்

ஆசை. தெளிவு தொனிக்க வேண்டும். ஆனால் சிக்கல் விடுவிக்கக் கூடாததாகவும் இருக்க வேண்டும். கவிதை நயம் எது என்று எடுத்துச் சொல்லக் கூடாததாக இருக்க வேண்டும். புரிய வில்லை போல இருக்க வேண்டும். அதே சமயம் பூராவும் புரியாமலும் இருந்து விடக் கூடாது. திரும்பத் திரும்பப் படித்துப் பார்க்க ஒரு தரம் படிப்பவருக்கும் ஒரு வேகம் ஒரு எதிரொலிக்கும் தன்மை, விடாப்பிடியாக உள்ளத்தைப் பிடித்துக் கொள்ளும் ஒரு குணம் இருக்க வேண்டும் இந்தப் புதுக்கவிதையிலே என்று தான் எண்ணுகிறேன். இலக்கணம் என்று எதையும் சொல்லிக் கட்டுப் படுத்தப்படக் கூடாதது கவிதை—அது தூர விலகிப் போய் விட வேண்டும். பிறகு பார்த்துக் கொள்ள லாம். இலக்கண அமைதிகள் பற்றி சிருஷ்டி சமயத் திலே இலக்கணத்துக்கோ, அதன் இடர்ப்பாடு களுக்கோ இடமே கிடையாது.

பொதுவாக ஒரு நான்கு விஷயங்கள் சொல்ல லாம்—புதுக் கவிதைக்கும் பழங் கவிதைக்கும் பொது வான விஷயங்கள் இவை. வார்த்தைச் சேர்க்கைகள் காதில் ஒருதரம் ஒலித்து, உள்ளத்தில் மீண்டும் எதிரொலி எழுப்புகிறதா என்பது முதல் கேள்வி. இரண்டாவதாக—எந்தக் காலத்திலுமே வாழ்க்கை எந்தக் காலத்து மனிதனுக்கும் சிக்கலானதாகத் தான் இருந்து வந்திருக்கிறது. அந்தந்தக் காலத்துக் கவிதை—நல்ல கவிதை—அந்தக் காலத்துச் சிக்கலை அப்படியே தருகிறது நமக்கு. அப்படி இன்றையப் புதுக் கவிதை இன்றைய வாழ்க்கைச் சிக்கல் தொனிக்க அமைந்திருக்கிறதா என்பது இரண்டாவது கேள்வி. இன்றைய வாழ்க்கைச் சிக்கலையும் புதிரையும் போலவே முதலில் புரியாதது போல இருந்து படிக்கப் படிக்கப்

காணக் கிடக்கிற உண்மை. சிலப்பதிகாரம் அதன் காலத்தில் மட்டுமல்ல; இன்றும் புதுக்கவிதை தான். அத்தோடு ஒப்பிடக் கூடிய கவிதை இன்று தோன்ற வேண்டுமானால் **புதுக்கவிதை** முயற்சிகள் மிக மிக அவசியம். அவை வரவேற்றுப் பாராட்டப்பட வேண்டும்.

இலக்கியச் சோதனைகளில் எப்போதுமே வெற்றி தோல்விகள் பூரணமானவை. என் புதுக் கவிதை முயற்சி வெற்றி பெறும் என்றே நான் எண்ணிச் செய்கிறேன். சோதனைகளின் தன்மையே இது தானே! செய்து, செய்து பார்க்க வேண்டும். அவ்வளவு தான்.

*(சரஸ்வதி ஆண்டுமலர் 1959ல் வெளிவந்த கட்டுரை)*

## அநுபந்தம்—2

தமிழ்க் கவிதைக்குக் கிழடு தட்டிய பருவம் இது என்பதில் யாருக்கும் சந்தேகம் இருக்க முடியாது. உலக இலக்கியத்தை நோக்கினோமானால் இரண்டாயிரம் வருஷங்கள் வளர்ந்தது உயிருள்ள கவிதையாக இருக்க முடியாது என்பது தெரியவரும்; அப்படி எந்தக் கவிதையும் இருந்ததில்லை. இப்போது தமிழ்ப் பெருமை தமிழ்க் கவிதைச் சுமையாக இருக்கிறது—சுவையாக இல்லை. இன்று எழுதப்படுகிற கவிதையை விட வசனம் உயிருள்ளதாக இருக்கிறது—உயர்ந்ததாக இருக்கிறது.

கவிதை அரசி மீண்டும் முன்போல தமிழில் கொலு வீற்றிருக்க வேண்டும்—உயிருள்ளவளாக இருக்க வேண்டும் என்றால் புது முயற்சிகள் புது சோதனைகள் நடைபெற்றாக வேண்டும். யாப்பு எதுகை மோனை இருப்பது தவறில்லை. நல்ல கவிதைக்கு முட்டுக்கட்டை அதிலில்லை. இன்றைய வாழ்க்கையின் சிக்கலை பிரதிபலிக்காமல், இன்றையச் சூழலின் குழப்பத்தை எடுத்துக் காட்டாமல், பழமையான மனப்பான்மையே, புதுக் கவிதை பிறப்பதற்குத் தடையாக உள்ளது. யாப்பு அமைதியுள்ள கவிதையும் புதுக் கவிதையாக அமையலாம் என்று சொன்னால் அது மிகையாகப் படலாம். ஆனால் தளை தட்டுகிற சீர் அற்ற கவிதைதான் புதுக் கவிதை என்பது சரியல்ல. பழைய தாமரையையும் சந்திரனையும், உருவகங்களையும் புதுமுறையில் உபயோகித்து விட்டதனால் மட்டும் புதுக் கவிதை பிறக்காது.

புதுக் கவிதைக்கு அடிப்படையான இரண்டொரு கருத்துக்கள்—(ஒன்று) இன்றைய வாழ்க்கை

சிக்கலை அது உள்ளபடி எடுத்துக்காட்ட வேண்டும். (இரண்டு) சிடுக்கை சிடுக்காகக் காட்ட வேண்டும். எளிமை நாடிய மகாத்மா காந்தியாலும் கூட நமது வாழ்வை எளிமையானதாக ஆக்க இயலவில்லை. சிடுக்குவிழுந்தது சிடுக்குத்தான். சிடுக்கில்லை என்று மூடி மறைக்கக் கூடாது. (மூன்று) வார்த்தைகளை, சிந்தனைகளை, உடைத்து, புதுவளத்துடன் கையாள வேண்டும்; பழங்கதையையே மீண்டும் பேசுவதில் சாரமில்லை; பழைய வார்த்தைகளை அப்படியே உபயோகிப்பது சரியல்ல. பழைய வார்த்தைச் சேர்க்கைகள் அரசியல்வாதிகளின் பிரசங்கங்களுக்குத் தவிர இன்று வேறு எதற்கும் பிரயோசனப்படா.

புதுக்கவிதையில் விஷயம், நோக்குத் தான் புதிதே தவிர, புதுமை வெறி கொள்வதாக இருக்க வேண்டும் என்கிற அவசியம் இல்லை. பழமை என்பது போல புதுமையும் ஒரு கட்டாயமாகி விடலாம்; தளையாகி விடலாம். நல்ல என்பதற்கும் பழைய அர்த்தத்தை மறந்து விட்டு யாப்புள்ள செய்யுளிலும் புதுக் கவிதை செய்யலாம் என்பதை நினைவில் வைக்க வேண்டும். யாராவது செய்கிறார்களா என்பதல்ல விஷயம்—செய்ய முடியும். இன்றில்லா விட்டால் என்றாவது செய்வார்கள் என்பது தான் விஷயம். புதுக்கவிதை தனது கவிதை உத்திகளில் பழைய சங்க இலக்கியங்களுக்குச் சென்று அவற்றின் உத்திகளைக் கையாளுவதில் தவறில்லை என்றே நான் சொல்லுவேன்.

கவிதையைப் பற்றி சொல்லப்படுகிற எந்த விஷயத்தையும் விட, எந்தக் கருத்தையும் விடக் கவிதை முக்கியமானது. இரண்டு மூன்று பக்கப் புதுக்